# இரண்டாம்பதிப்பைப்பற்றிய

# குறிப்பு.

---

"சுலோசனை" யென்னும் அழகிய இச் சிறுகதையின் முதற்பதிப்பு இற்றைக்குப் பதினோராண்டுகளுக்குமுன்னர் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. அப்பதிப்பு வெளியானபின் பலபெரியார் இதன் நடைநலம் பொருணலம்முதலியவற்றைப் பாராட்டி மதிப்புரையருளினார்கள். அவற்றுட் சில இப் பதிப்பிற் சேர்க்கப்பட்டன. சிலகல்லூரிகளில் அங்கிலம்பயிலும் உயர்வகுப்புமாணாக்கர்களுக்குப் பாடப்புத்தகமாக அமைந்தமையானும் முதற்பதிப்புமுற்றும்செலவானமையானும் இப்பொழுது இரண்டாம்பதிப்பாக வெளிவரலாயிற்று. தமிழிற் சுவைநலமுணர்ந்து நடைநலம்பேணும் புலவர்பெருமக்களின் உவகையுரையே இதனைவெளியிடும் மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையாருக்குக் கைம்மாறாகும்.

மகிபாலன்பட்டி,
24—7—1933.

இங்ஙனம்,

**மு. கதிரேசன்.**

கணபதிதுணை.

# அறிவித்தல்.

அறிஞர்காள்!

சுலோசனை யென்னும் இச் சிறுகதை இராமாயண சம்பந்தமுடைத்தென்பது யாவரும் அறிவர். இராமகதையை வடமொழிக்கட் பெரியார்பலர் பற்பலவேறுபாட்டுடன் செய்திருக்கின்றனர். அவற்றுள், இஃது ஏதாவதொன்றில் அடங்குமென்று ஊகஞ்செய்யத்தக்கநிலையி லுள்ளது. இதுகருதியே, " அறிஞர்வாயிலாக் கேட்கப்படுகின்றது " என்று இதன் றொடக்கத்திற் கூறியதுபோலும். எங்ஙனமாயினுங் கதை நிகழ்ச்சி மிக்க சுவையுள்ளதே. அவலச்சுவையே இதன்கட் சிறப்பாக நிலவுகின்றது. சுலோசனையின் அருங்கற்பும், பெருங்குணங்களும், அறிவுடைமையும், தலைவற்பிரிவாற் றுன்புறுநிகழ்ச்சிகளும் படிப்பார்க்கு வியப்பும் உருக்கமுந் தோன்ற இன்புறுத்துவனவாம். உண்மைக்கற்பினிலை யிற்றென்று இதனாற் றெள்ளிதி லுணரலாம். அறுபட்டன வாகிய கையும் தலையும், எழுதியதும் பேசியதும் கற்பின் ஆற்றலைப் புலப்படுத்துவனவாம். இப்பிறப்பிற் பயிலப்படாதாரைக் கண்டவிடத்து ஓரோவழியுண்டாம் அகநிகழ்ச்சிகளுக்கு முற்பிறப்பின்றொடர்பே காரணமென்பதும் இதன்கட் காணலாம்.

இது, மதுரையின்கணுள்ள இராமேசுவர தேவஸ்தான வடமொழிக்கலாசாலைத் தலைமையாசிரியர் (Principal) வித்தியாநிதி ஸ்ரீ ர. கிருஷ்ணமாசாரியர் M. A. அவர்களாற் சென்னையினின்று திங்கடோறும் பிரசுரிக்கப்பட்டுவரும் 'ஸஹ்ருதயா' என்னும் வடமொழிப்பத்திரிகையிற் பத்து வருடங்களுக்குமுன்னர் வெளியாயது. இப்பொழுது புதுக்கோட்டைஸம்ஸ்தானத்தைச்சார்ந்த மேலைச்சிவபுரியின்கணுள்ள சன்மார்க்கசபையார்விருப்பின்வண்ணம் தமிழறிஞர்களும் படித்தின்புறற்பொருட்டு மொழிபெயர்க்கப்பட்டது.

மகிபாலன்பட்டி
துன்மதி-ஞு
மார்கழி-மீ கசுஉ

இங்ஙனம்,

மு. கதிரேசன்.

# மதிப்புரைகள்.

சென்னை மஹாமஹோபாத்தியாய, டாக்டர்.

## பிரமஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள்.

தாங்களியற்றிய 'சுலோசனை' என்னும் மொழிபெயர்ப்பு நூலைப் படித்துப்பார்த்து மிக்க மகிழ்ச்சியடைந்தேன்.

இதன் நடையும் கருத்துக்களும் நூதனமாகப் பெயர்த்துரைக்கப்பெற்ற மொழிகளும் மிக்க இன்பம் பயக்கின்றன. இப்புத்தகம் என்போலியர்க்கு ஒரு புதுவிருந்தாகவே காணப்படுகின்றது. வடமொழியிலிருந்து பெயர்த்துரைக்கப் பெற்றநூல்களுள் இது சிறந்துவிளங்குகின்றது என்று சொல்லத் தட்டில்லை. பிரசங்க ஆற்றல், செய்யுள்செய்யும் வன்மை, நூலாராய்ச்சித்திறன் முதலியவை அமைந்திருத்தல் போலவே மொழிபெயர்க்கும் ஆற்றலும் தங்கள்பால் நன்கு அமைந்திருக்கின்றதென்பதை இந்நூலாற் கண்டேன். நீடு வாழ்க.

திருவேட்டீசுரன்பேட்டை<br>தியாகராஜ விலாசம்<br>௬-௪-௧௯௨௨.

இங்ஙனம்,<br>அன்பன்,<br>வே. சாமிநாதையன்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்துக் கௌரவகாரியதரிசியும்,
உயர்தரநீதிமன்றத்து வழக்கறிஞரும் (Advocate) ஆகிய

**திரு. S. S. பாரதியாரவர்கள் M. A; B. L;**

தங்கள் 'சுலோசனை' மொழிபெயர்ப்புநூலைப் பெற்றேன். கதை கவினிது; கற்பறிவுறுத்துங் கருத்துக்கள் செவ்விய; நடை அரிதிலினியது; பண்டிதரன்றிப் பலர்க்கரிது; படித்தறிபவர்க்கினிதே. கதைச்சுவை குன்றாது உயரிய நடையில் ஒழுகும் திட்பமும் தூய்மையோடினிமையும் மலிய வடமொழியிலுள்ளதொன்றைத் தமிழ்வசனப்படுத்தியாளுந் திறமை வியக்குமாறுடைத்து.

மதுரை.
31—3—1922.

சொந்தன்,
**S. S. Bharati.**

திருநெல்வேலி உயர்தரநீதிமன்றத்து வழக்கறிஞரும்
கல்கற்றா தாகூர் சட்டவிரிவுரைகாரரும் ஆகிய
சைவத்திருவாளர்

**கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள்,** M. A; M. L;

தங்களது தமிழ்ச்சொன்னயமும் பொருணயமும் மிக்க 'சுலோசனை' யென்னுங் கற்பரசிகதையினைக் கற்று மகிழ்வெய்தினேன். தமிழ்ப்புலமையோடு வடநூற்புலமை சிறந்துள்ள தங்களைப்போன்றவர்கள் அரிய வடநூல்களைச் செந்தமிழில் மொழிபெயர்த்துதவினால் தமிழுலகம் பெரும் பயன் பெறுவதாகும்.

மைலாப்பூர்,
6—4—1922.

அன்பன்,
K. சுப்பிரமணியன்.

'ஸஹிருதயா' என்னும் வடமொழிப் பத்திராதிபராகிய
வித்தியாநிதி ஸ்ரீ உப. வே.

**ர. கிருஷ்ணமாசாரியரவர்கள், M. A.**

தாங்கள் அன்புடன் அனுப்பிய 'சுலோசனை' வரப்பெற்றுக்கொண்டேன். வடமொழியிலுள்ள ரஸமானபாகங்களும் அபிப்பிராயங்களும் தமிழில் அழகியநடையில் எழுதப்பட்டிருக்கின்றன. இது தமிழில் மாணுக்கர்களுக்குப் படிப்பிக்கக்கூடிய கிரந்தங்களில் முக்கியமானவைகளில் ஒன்ருக நிச்சயிக்கத்தகுதியுள்ளது.

மதுரை,
உ௭-அ-௧௯௨உ.

இங்ஙனம்,
தங்களிஷ்டன்,
ர. கிருஷ்ணமாசாரியர்.

உ

கணபதி துணை.

# சுலோசனை.

முதற்காப்பியமாகிய இராமாயணப் பயிற்சியில் மிக்க
றுடையார்க்குங் கேட்டவளவினானே நிகரிலா வியப்பைத்
கின்ற இச் சுலோசனையென்னும் பழஞ்சரிதம் அறிஞர்
யிலாகக் கேட்கப்படுகின்றது. "இராம" என்னும் அழகிய
லோடு நிலவுலகத்தி லவதரித்துத் தந்தையார் திருமொழி
ராம்பல்வேண்டுமென்னும் உறுதியால் அரசுதுறந்த திரு
ள்கொழுநனது மூவுலகத்தையும் மயக்குறுத்தும் பேரெழி
லனைச் சூர்ப்பநகை கண்டு காமமயக்க முடையவளாய்,
வ்விராமபிரானை அப்பொழுதே தனக்கு மணவாளனாக
வண்டி, அதுகாரணமாக இலக்குமணனாற் றனக்குநேர்ந்த
னக்கேட்டைக் கரதூடணர்களுக்கு அறிவுறுத்து, அவ்
ராக்கதர்களும் கூரிய இராமபாணத்தா லுயிர்துறப்பக்கண்டு
ரைகடந்தெழூஉந் துன்பக்கடலுண்மூழ்கி மிகுவிரைவில்
டித் தனது மானக்கேட்டிற்கு ஏதுவாகநிகழ்ந்தசெய்திக
னைத்தையும் இலங்கைக்கிறைவனாகிய இராவணனுக்குணர்த்
தினாள். அவ் விராவணன் அச் செய்திகளைக்கேட்டுக் கூற்று
வன்போல மிக்கசினத்தாற் கொதித்துப் பொன்மானா லிராம
பிரானைவஞ்சித்துச் சானகியைக் கவர்ந்தான். கொடியவனாகிய
அவ்வரக்கர்தலைவன் இழைத்த கொடுஞ்செயலையறிந்த இராம
பிரான் சுக்கிரீவன்முதலிய குரக்குத்தலைவர்களோடு சென்று
இலங்கையை வளைத்தான். பின்னர்நிகழ்ந்த பெரும்போரில்

இராமபிரான் வில்லினின்றும் வெளிப்போந்த கொடிய விடப் பாம்புகள்போன்ற அம்புகளால், கும்ப நிகும்ப அதிகாய மகாகாயர் முதலிய இராக்கதரெல்லாம் நீறுபட்டழிந்தவுடன் சிறிது அச்சமுற்ற இராவணன், நெடுநேரஞ்சூழ்ந்து இந்திர சித்து ஆகிய தனதுகுமாரனையழைத்துப் போர்புரிதற்கேவி னன். உலகபாலரிடத்து வெற்றிகொண்ட அவ் விந்திரசித்து, பல்லாயிரவராகிய அரக்கர்கள் புடைசூழப் பகைவரைப்பொரு தான். அவ்விராவணகுமாரன் நெடுநேரம் போருஞற்றியும் ஓரிடத்தில் ஒவ்வொருகணத்திலுங் குரக்கினங்களாற் கோறல் செய்யப்படுந் தனதுபடைகளையும், மற்றோரிடத்தில் இலக்கு மணன் விடுத்த பகழியினுறைப்பாற் சிதறுண்ட தன்னையுஞ் சீர்ப்படுத்தற்கு வலியிலனாய் வெற்றியின் அவாவற்றுப் போர்க்களத்தினின்றும் வெளிப்போந்து இலங்கையையெய்தி இராமலக்குமணர்களுடையதெய்விகவன்மையையும், தனக்கு நேர்ந்த மானக்கேட்டையுந் தந்தைபாலுணர்த்தினன்.

அதுகேட்ட இராவணன் அஞ்சத்தக்க சினமுடைய னாய்ப் பற்களை நெறுநெறெனக்கடித்து "அட! இழிதகவ! விட் புலவேந்தன்முதலிய உலகபாலகர்களையும்வென்றும், மிகவும் இழிந்த மக்களிடத்திற் றோல்வியுற்று நாணமின்றி எங்ஙனம் மீண்டுற்றாய்? செல்! செல்! என்முன்னிருத்தற்குத் தகுதி யில்லாதவனாகின்றாய்" என்று பேரொலியாற் பழித்துரைத் தான்.

இதனைக்கேட்ட இந்திரசித்து, பின்னரும், "இராம லக்குமணர்கள் உண்மையில் மக்களல்லர்; அவருள், இராமன், மூன்றுலகங்களுக்கும் இன்னல்புரியும் நின்னை அடியோடழித்

தற்கு நிலவுலகத்தில் அவதாரஞ்செய்த திருமகள்கொழுந னென் றறிவாயாக. இன்றே சானகியை அவன்பக்கல் சேர்த்திலையேல் நங்குலத்தில் ஒரு சிறுதுகளும் காண்டல் அரிது'' என்று கூறினான். இராவணன் மிக்கசினத்தாற் கிளர்ந்து அவ்வெகுளித்தீயால் நீறுக்கமுயல்பவன்போலத் தன்புதல்வனைப் பின்னருங் கடுஞ்சொற்களாற் பழித்துரைத் தான்.

இவ்வமயத்தில் அவற்கு இனியநண்பனாகிய வித்தியுச் சிருவன் என்னும் அமைச்சன் இலங்காநாயகனைச் சிறிது தேற்றி, நிகும்பிலையில், விரும்பியவைகளைத்தரும் ஒருவேள்வி யைச் செய்துமுடித்தற்கு இந்திரசித்துவைப் போக்கினான். இராவணகுமாரன் அங்ஙனமேசெய்வலென்று கூறிப் புறப் பட்டுப் பன்னாட்குமுன்னர்க்கண்ட தன் அன்பிற்கருங்கல மாகிய மனைவியைக் காணவிரும்பி அவளுறையும் இல்லத்தை யெய்தினான்.

எய்திய அவ்விந்திரசித்து, பிரிவாமெனய்தியபசப்பா னெழின்மிக்க கதுப்புக்களைக் கைத்தலத்தணைத்து அளவின் மிக்க மூச்சுக்காற்றுக்களால் உள்ளத்துள்ள பிரிவுத்தீயை விசிறுகின்றவளும், எப்பொழுதும் பெருகி யிடையறாதொழு குங் கண்ணீர்த்திரளால்நனைந்த மேலாடை யுடையாளும், ''என்னையொத்த துன்பமிக்கபெண் இவ்வுலகத்தில் வேறு ஒருத்தியுமில்லை'' என்று பலவிதமாகத் தன்னைப் பழிக்கின்ற வளும், தோழிமார்கள், ''தோழி! தேறுவாயாக. நின் பிராண பதி அவசியம் விரைவில் வருவான். தாபத்தையும் போக்கு வான். ஆதலின், இவ்வவலத்தை யொழிப்பாயாக'' என்று

அடிக்கடி தேற்ற, அவர்களைநோக்கிப் "பேறிலளாகிய யான் என்செய்வல்! எனது அன்புரிமைத்தலைவனது அழகியமுக கமலத்தை யான் என்றுகாண் எங்ஙனங் காண்பேன்" என்று அழுங்கலிற் றடுமாறுகின்ற சொற்களான் மெல்லமெல்லப் பேசுகின்றவளும், சில அணிகலன்களையுடையவளும், இளமை மிக்காளும், தாமரையி னிளந்தண்டுபோன்ற மெல்லிய உடலை யுடையாளும், நினைந்து நினைந்து புலம்புகின்றவளும், அழகிய எயிறுகளையுடையாளும், கற்பரசியும் ஆகிய சுலோசனை என்னும் பெயரையுடைய தன் காதலியைக் கண்டான்.

விரகவிதனமே உருவெடுத்தாற்போல் அங்ஙனமிருக்கின்ற காதலியைக்கண்ட அவ் விந்திரசித்து, மகாவீரனுயினுந் திண்மையை அறவே ஒழிப்பதூஉம், நெஞ்சைப்பிளப்பதூஉமாகிய சோகாக்கினியினுல் எரிக்கப்படுகின்ற மனத்தை யுடையனுய்த் தோழிகள் விரைந்தெடுத்திட்ட பொன்மயமான வேத்திரவிருக்கையில் இருந்தான்.

சுலோசனையும், தான் பன்னுளாகவிரும்பிய தலைவனை உண்ணுநோன்புடையனபோல விளங்குங் கண்களாற் பருகி, அவசமுற்று, வியப்பெய்திச் சிலவெழுத்துங் கூறுதற்கு வலியிழந்து காந்தனது திருவடிகளை வணங்கி, மிகமுயன்றுங் கண்ணீர்ப்பெருக்கைத் தடுத்தற்கு ஆற்றலின்றிச் சிறிது நேரம் இன்னது செயற்பாலதென்றறியாளாய் ஓவியத்துற் றுள்போன்று அசைவற்றுத் தன்வயமிழந்து நெடுநேரம் வாய் வாளாதிருந்தாள்.

இன்னல்மிகுதி சிறிது தணிவெய்தியபின், இந்திரசித்து மிக்கொழுகுகின்ற நீர்த்திவலைகணிரம்பிய சுலோசனையின்கண்

களைத் தனதுகைத்தலத்தால் மீண்டுமீண்டுந் துடைத்து, அவளைநோக்கி "ஏ காதலி! அலர்ந்த தாமரையினிதழ்களை யொத்த அழகியவிழிகளினின்று இங்நீர்ப்பெருக்கு ஆறு போல் வழிகின்ற தென்னை? இளம்பருவக் குணங்கரசே! பெருங்காற்றுன் அலைப்புறாஉம் இளங்கதலிபோல் மிகமெல் லிய நினது இவ்வுடற்கொடி நடுங்குதல் எற்றிற்கு? அன்பே! அணிசெய்துகொள்ளாமை யென்? மிகக்கடியதாய புன்கணு னிரம்பி யோசையின்றியழுதல் எக்காரணம்பற்றி? யான் சிறிதேனுங் கேடுசெய்ததாகக் கூர்ந்தாராய்ந்துபார்த்தும் புலப்பட்டிலதே! அங்ஙனுய்? நினதுவருத்தத்திற்குக் காரண மின்னதெனக் கூறுவாயாக. இப்பொழுதே நின் துக்க காரணத்தைப் போக்குதற்கு அடியேன் சித்தனுக இருக்கின் றேன்" என்று கூறினுன்.

சுலோசனையும், சிறிதுசிவந்த உள்ளிடத்தையுடையகண் களை முன்றுனையால் நீவித் தழுதழுத்த குரலுடன் "நாத! அநாதயைப்போல் என்னைவிடுத்து இத்துணைக்காலமாக வாரா திருந்த நின் வன்னெஞ்சைப் பேறிலளாகிய யான் என் னென்று கூறுவேன்? இப்பேதைசெய்த குற்றம் யாது? இப் பொழுது அவசியம் வருவாய், மாலைவருவாய், இரவில் வரு வாய், நாளைவருவாய், அதன்பின்னுள்வருவாயென நினைந்து எத்துணையோ கற்பம்போன்ற நாட்களைப் போக்கினேன். இன்றுதான் என்விருப்பம் பயனுயிற்று. என்மாட்டு அரு ளுண்டாதற்கு இத்துணைநாட் சென்றது" என்னுஞ் சொற் களைப் புகன்றுள்.

இந்திரசித்து அவள்சொற்களைக்கேட்டு, "மருள்விழியாய்! நிகழ்ந்தசெய்திகளனைத்தும் உணர்ந்திருந்தும் இங்ஙனங்

கேட்டலென்னை? பன்னாள்வளர்க்கப்பட்டதும், மிகஇனியது மாகிய நமது காதற்கொடியை யான் என்றும் மறவேன். நின் பால் எதுபற்றியும் எனக்குக் கோபமின்று. காலத்தின் மாறு பாட்டை அறிந்திருக்கிறாயன்றோ. என் தந்தை சானகியைக் கவர்ந்தமையாற் பெரியகேடுகளின்றொடர்ச்சி யுண்டாயது. தத்தமுள்நேர்ந்த பகைமினையுடைய இராம இராவண சைன் யங்களின் மிக அஞ்சத்தக்க போர்க்களத்தில் அதிகாயன் முதலிய பெரியவீரர்களும் இறந்தனர். மூவுலகத்திலும் புகழ் பெற்ற பராக்கிரமத்தையுடைய எனது சிறியதந்தையாகிய கும்பகன்னனுஞ் சரிதத்தான் எஞ்சிய விக்கிரமனாயினான். யானும் அரக்கர்கள்சூழ்வரச்சென்று நெடுநேரம்பொருது, இலக்குமணன்விடுத்த கணைகளாற் பிளக்கப்பட்ட மார்பினை யுடையனாய், மிகவுந்துன்புற்றுத் தந்தையின்பக்கலெய்தி இவ் வெல்லாவற்றையுந் தெரிவித்தேன். இராமலக்குமணர்க ளுடைய ஆண்மையை அறியாதவனாகவே அவ்விராவணனும் மூவுலகத்திலும் வெற்றியைத்தரும் ஒருவேள்வியை நிகும் பிலையிற் செய்தற்கு இன்று என்னை ஏவினான். நின்னைக் காண்டலிலாவும் மனத்தினையுடைய யான் வழியிடையே ஈண்டுப் போதரலானேன். ஆதலின் எனக்கு விடைதருவா யாக. கவலையை ஒழிக்க. மிகவிரைந்து திரும்புவேன்" என்று இவ்வாறு கூறினான்.

அதுகேட்ட சுலோசனை சிறிது நீர்ததும்ப நிலநோக்கிய கண்களையுடையளாய், "உயிர்த்தலைவ! இப்பொழுதே இங்குப் போந்த நினதுபிரிவை மீண்டும்பொறுத்தற்கு எங்ஙனம் ஆற்றலுடையேன்? நிகும்பிலையில் வேள்வியைமுடித்துப் பின்னரும் போர்கருதியன்றோ செல்லவிரும்புகின்றாய்.

அந்தோ! அளவில்லாத அம்புகளின்வீழ்ச்சியாற் புண்பற்றிய நினது இவ்வுடலைக் காண்டற்கு என்னெஞ்சந் துணிந்திலது. நிற்க, இவ்விடயத்திற் சிறிதுகூறுதற்கு என்னுள்ளந் துணிகின்றது. மனிதஇயல்பைக் கடந்த தோள்வலிமிக்க வீரனுகிய இராமன் எங்கே? நினதுதந்தை எங்கே? கடவுட்கூறனுகிய இராமனைப் போர்முனையில் வெல்லுதற்கு மனிதஇயலபினுல் எங்ஙனங் கூடும்? நீ இவ்வெல்லாவற்றையும் உணர்ந்தும் போர்கருதிப்புறப்படமுயலல் என்னை? இனி இப்பயனற்ற செயல் அமைக. இம்முயற்சியினின்றும் ஒழிவெய்துக. என் மாமன்செல்கின்ற இவ்வழி நல்லோரால் விரும்பத்தக்க தன்று. அவனே கற்பினுக்கணியாகிய சீதாபிராட்டியைக் கொணர்ந்து எரிகின்றநெருப்பைப் புதர்நடுவண் இட்டாங்கு நகரிக்கண்வைத்தான். தலைவற்பிரிந்த துன்பதநிலையுடைய அச் சீதையின் சோகாக்கினியானது காட்டுததீப்போல எல்லாவற்றையும் விழுங்குகின்றது; இங்ஙனம் போர் முகத்தே மகாவீரர்களாகிய நினது சிறியதந்தை முதலியோர் களையுஞ் சரிதத்தின் எஞ்சியவர்களாகச்செய்தது. இத்தீய எல்லாப்படைகளையுமுடைய நினதுதந்தையையும் அழிததல் உறுதி. ஆதலின், கேட்டினைவிளைக்கின்ற இப்பயனற்ற செயலினின்றும் ஒழிக; ஒழிக. அதனுல் ஒருசிறிதுங் குற்ற மின்று. தான்செய்ததீவினைப்பயனைத் தானே அநுபவித்தல் என்பது நிச்சயம். நினது சிறியதந்தையாகிய விபீடணனைப் பாரக்க. அறவோனுகிய அவ் விபீடணன் தன்முன்னேனைத் தீநெறிக்கண்ணின்றும் மீட்டற்குஆற்றலிலனுய் இராமனையே புகலிடமாக அடைந்தான். அவனே பெறலரும்பேறுடையான்" என்று இன்னேரன்ன அழகியசொற்பெருக்குகளால வணக்கமுடி, நலமும், பிரியமும்பொருந்த உபதேசிநதாள.

இந்திரசித்து, தன்காதலியின் உபதேசம் அழகியதெனி னும் அதனைப் பொருட்படுத்தாமற் சிறிதுசினமுடையனாய்ச் "சிறியவளே! இது, நினது இளமைக்கு ஏற்றதே; அரசியன் முறைமைகளைச் சூழ்ந்து தெரியாமலும் சமயத்திற்செயத் தக்கதின்னதென்று உணராமலும் நின்றால் மிக்கசதுரப்பாட் டுடன்தொடங்கப்பட்டது. பெரும்போர்நேர்ந்திருக்கின்றது. பகைவர்களாற் பெரியவீரர்களும் மாண்டனர். யான் சுதந்திர மில்லாதவன். தந்தையின்கட்டளை பெரிதன்றே. தெய்வ சம்பந்தமான ஊழ் நலமெனினுந் தீதெனினுஞ் செய்க. தந்தைசொன்மிக்க மந்திரமில்லையன்றே. அதன்பொருட் டன்றே நமதுபகைவனாகிய இராமன் *அரசேதஞ்சமென்று அருங்கானடைந்தான்? விரித்தலிற் பயனென்? காலங் கடக் கின்றது. இனிக் கணப்பொழுதேனும் ஈண்டிருத்தற்கு ஏன்றாற் கூடாது. போகின்றேன். தெய்வம் அருள்செய்யின் மீள்வேன்" என்றுசொல்லிக்கொண்டே நீர்நிறைந்தகண்களை யுடைய சுலோசனையைக் கணப்பொழுதில் விட்டுப்புறப்பட் டான்.

அவன்சென்றவுடன், சுலோசனை தன்தலைவனுக்குவரற் பாலதாகிய தீமையின்றிரளை ஐயுற்று உள்ளத்தா லொன்றைக் கருதி நெடிதாகவும் வெப்பமாகவும் பெருமூச்செறிந்து அசைவறுநிலையை யண்மினாள். அதன்பின் சேடியர்கள்தேற்ற அரிதிற்றெளிவெய்தி நீர் பொழி விழிகளையுடைய முக கமலத்தை இடதுகையிற்றாங்கி ஒன்றுமுரையாது கீழ்நோக் கியமுகமுடையளா யிருந்தாள்.

---

* அரசு தஞ்சமேயென்று—அரசு எளிமையேயென்று.

இங்ஙனந் துன்புறுமமயத்தில் * எருவையிறகா னணி செயப்பட்டதூஉம், பொற்பிடியான் ஒளிசெய்கின்றதூஉம், இரும்பினுனுக்கப்பட்டதூஉம், வாயுவேகத்தால் அச்சத்தை விளைக்கும் ஒலியினையுடையதூஉம், பார்த்த அளவினுனே மயக்கத்தைப்புரிவதூஉம், உருவத்தோடுங்கூடிய கூற்றுவன் சினம்போன்றதூஉம், வாளின்றன்மையெய்தப்பெற்ற கரும் பாம்புபோன்றதூஉம் ஆகிய பெரியவாளாயுதத்தோடுங்கூடிப் பொன்னுைய தோளணியாற் கவின்று செஞ்சந்தனச்சேற்று லணிசெய்யப்பட்ட ஒரு †கைத்துண்டு, மரகதமணியுருவாகிய ஒரு தூணின்மேற்றறத்தைச் செய்வதாய் ஆழிப்படைபோற் சுழன்று அச் சுலோசனையின்முன்னிலையில் வீழ்ந்தது.

"ஆ! ஆ! ஈதியாது" என்று துன்புறுமுள்ளத்தாராகிய தோழிகளினது கலகலவொலியால் நன்குவிழித்த கண்களை யுடைய அப்பெண்மணி, தனது விழித்துணையால் முன்னர் வீழ்ந்துகிடக்குங் கைத்துண்டினைப்பார்த்துச் சிறிது ஆலோ சனையுடையளாய்ப் பொற்கோடுகளான் வரையப்பட்ட தன் நாயகனது பெயரெழுத்துக்களை அக்கொடிபோன்ற வாளி னிடத்து எதிர்பாராது நோக்கி யப்பொழுதே கூந்தல்சரிந்து நிலத்திற்பரவத் திடீரென்று வீழ்ந்தாள்.

விரைவில் நிலத்தினின்றும் எழுந்து அக் கைத்துண்டி னைத் தனது கைக்கொடிகளாற் றழீஇப் பெருகுகின்ற கண்ணீர்த்துளிகள் விண்மீனையொத்துநிலவும் முலைகளையும்,

* எருவை—கழுகு.

† துணிக்கப்பட்டகை.

மிகவும் நெட்டுயிர்த்தலையும் உடைய சுலோசனை, "ஆ! கொல்லப்பட்டேன்! ஆ! சுடப்பட்டேன்! ஆ! கவரப்பட்டேன்! ஆ! வஞ்சிக்கப்பட்டேன்! ஆ! எய்திய இத்துன்பம் என்னை? நோய்கோட்பட்டேன்! புகலிடமில்லேன்! துன்புறுகின்றேன்! ஆ! முப்பெரும்புவியினும் ஒப்பிலா அழக! எவனாற் கொல்லப்பட்டாய்? ஆ! சுலோசனையாகிய உயிரையுடையாய்! என்னைத் தலைவனையிழந்தவளாகவும் தனியளாகவும்விட்டு எவ்வாறு சென்றாய்? அம்ம! உயிரைப் பொறுத்தற்கு ஆற்றலில்லேன். தலைவ! இப்பொழுது நின்னையில்லா எனக்கு இவ்வுலகம் பாழ்ங்காடு; பிறப்புப் பயனற்றது, உடல் உலர்ந்த விறகின் றன்மையது. ஏ! பகைவனாகிய கூற்றுவனே! இப்பொழுதே எனது உயிரைக் கொள்வாயாக. ஆ! சுலோசனையின் கண்களாகிய சகோரப்புட்களுக்குரிய திங்களஞ்செல்வ! புலோமசை கேள்வனை விளையாட்டாக வென்று "இந்திரசித்து" என்னும் பெயரினை எங்கணும் நிறுவிய பெருமையினையுடைய நினது அவ்வலி யாண்டுச் சென்றது? பிறரிடத்துக் காண்டற்கரிய நினது நன்று தீது ஆராயும்அறிவு எவ்விடத்துப்போயது? 'கேட்டைவிளைக்கும் இம்முயற்சியினின்றும் ஒழிக ஒழிக' என்று பன்முறை பகர்ந்தேனே. ஏழையாகிய என்னை விரும்பாதுசென்ற நீ எவ்வாற்றானும் இன்புறுகின்றாய். நீ யாண்டுள்ளாயோ ஆண்டே யென்னையுஞ்சேர்க்க. காலத்தினது மாறுபாட்டுத் தன்மை யென்னே! அகாலத்தில் எய்திய வெதுப்பினாலே எனது உள்ளுறையுயிர் சூடுற்றதுபோலும்! உடலுறுப்புக்கள் வெந்தனபோலும்! பிராணவாயுக்கள் வெளிச்சென்றன போலும்! ஆ! என்செய்வேன்! இன்னுயிர்த்தலைவனைப்

பின்னரும் எங்ஙனங்காண்பேன்? இந்நிகழ்ச்சியின்பின்னர், வாழ்க்கையில் எனக்கு ஒருபற்றுமின்று. இப்பொழுதே சேர்ந்தாரைக்கொல்லியைச் சேர்வேன். இன்றேல், இப் பயனற்றவுடலைக் கரையிலா ஆழியில்எறிவேன். அதாஅன்று, வெறும்பிய உயிரினையுடைய எனது யாக்கையைக் கோறற் றொழிலையுடைய விலங்கினங்களுக்குப் புலவுணவாக்குவேன்" என்று இன்னோரன்ன பன்மொழிகூறிப் புன்கணுற்றுப் புலம்புகின்ற சுலோசனை அவ்வமயம் எளிதான இயக்கமின் மயக்கத்தான் மூடப்பட்டாள்.

பின்னர், அணிமையிலுள்ள தோழிகளுள் ஒருத்தி சுலோசனையைத் தாங்கினாள். மற்றொருத்தி பொற்கலசத்தில் நீர்கொணர்ந்து அவள் செந்தாமரையனைய திருமுகத்தையும், விழித்துணையையும், கழீஇயினாள். வேறொருத்தி, சுறு சுறுப்போடு பனிநீரிற்றோய்ந்த சிவிறியினால் மெல்லமெல்ல வீசி இளங்காற்றைப் பரவச்செய்தாள். வேறுசில அறிவு மிக்கபெண்கள் 'தோழீ! சுலோசனே! தெளிக. தெளிக' என்று அடிக்கடி தேற்றினார்கள்.

அறுக்கப்பட்டு நிலத்தில்வீழ்ந்த கற்பகவல்லிபோன்றவ ளும், மேகத்தினின்று பெருங்காற்றாற் பிடுங்கி வீழ்த்தப் பட்டு நிலத்திற்கிடக்கின்ற மின்னற்கொடிபோன்றவளும், சேற்றால்நிரம்பிய தாமரைத்தண்டுபோலப் புழுதியினால் நிரம்பிய திருமேனியுடையாளும், நிலைபெயர்ந்த தாமரைக் கொடிபோலத் தலைவற்பிரிந்த துன்பத்தாற் கவலுகின்ற உடலையுடையாளும் ஆகிய அம்மெல்லியலைப் பார்த்தற்கு ஆற்றாதவர்களான தோழிமார்கள், "ஆ! எய்தின இத்

துன்பம் என்னை?" என்று கதறிக்கொண்டு நிலத்தில் வீழ்ந்தார்கள்.

இங்ஙனம் ஒவ்வொருகணமும் உட்புகுந்த சோகாக்கினியாற் சுடப்பட்ட உள்ளத்தையுடைய சேடியர்களது மிகக் கொதிக்கின்றகண்ணீர்வெள்ளத்தால்நனைக்கப்பட்டசரீரத்தையுடைய சுலோசனை அரிதிற்போந்த அறிவையடைந்து அக்கணத்தே இறத்தலையே புகலிடமாக நினைத்து மிகவும் புலம்பித் தலைவற்கெய்திய சொல்லொணுநிலையை நினைத்து "ஆ! காமசுந்தர! பாவியாகிய இவள் நின்னையின்றி எங்ஙனம் உயிரைத்தாங்குவாள்? ஏ! இன்னுயிர்த்தலைவ! நின்னுயிர் நீங்கியும் என்னுயிர் இக்கணத்தே வெளிச்செல்லாதிருத்தல் என்னை? ஐய! இப்பொழுது அருள்செய்வாயாக. நின் வாசத்தானத்தில் என்னையுஞ் சேர்க்க. ஆ! தோழிகளே! மரணத்தினும் மிக்க இத்துன்பத்தையநுபவிக்கின்ற யான் பிரியபதியின்றியும் நாணில்லாதவளாக எப்பயன்குறித்துச் சீவிக்கின்றேன்? எவனுடைய அன்புமிக்க அழகிய பன் மொழிகளால் அளவளாவிக் காலத்தைப் போக்குவேன்? எனது புன்கணை யார்பாற் றெரிவிப்பேன்? சந்திரிகை சந்திரனையும், மின்னல் முகிலையுஞ் சார்தல்போல், எல்லாத் துன்பங்களும் ஒழிதற்பொருட்டு யான் எனது உள்ளுறை தலைவனைச் சார்கின்றேன். விறகுகளைக்கொணர்ந்து சிதையை அடுக்குங்கள். நெருப்பை எழுப்புமின்கள். என்னை இறுதியான தழுவுதலாற் பெருமைப்படுத்துமின்கள்" என்று சகிகளோடுங்கூடிப் புலம்பிப் பின்னரும் இயக்கமின்மயக்கம் எய்தினாள். அதன்பின் முகூர்த்தப்போழ்திற் றெளிவையடைந்து சிறிதுபொழுது "ஆ! நாத" என்று மார்பில்

அடித்துக்கொண்டு புலம்பினாள். சிறிதுபொழுது நெடியதுங் கொடியதுமான பெருமூச்செறிந்தாள். சிறிதுபோழ்து "நின்னையே புகலிடமாகவுடைய இவளைத் திடீரென்று ஒழித்து நினைவுமாத்திரையான கதியை யடைந்தனையே. இவ்வொழுக்கந் தக்கதன்று" என்று வாய்திறந்து கதறினாள்.

இத்தகைய துன்பநிலையை அநுபவிக்கின்ற அழகிய கண்களையுடைய அச்சுலோசனையைத் தோழி ஒருத்தி, வணக்கத்துடன் துன்பமும் அநுதாபமும் தோன்ற, "ஏடி! சுலோசனே! ஊழ்வலியால் நேர்ந்த இந்நிகழ்ச்சியில் யாது செயற்பாலது? வாடுதலில்லாத சண்பகமலர்போன்ற அழகிய உடலில் மேகமின்றியே இடியைவீழ்த்திய பாதகமிக்க கொடியஊழ் நன்றுசெய்திலது. ஊழ்வலியை விலக்குதற்கு உலகத்தில் எவன் வலியுள்ளான்? முற்பிறப்பிற் செயப்பட்டதும், *கழுவாயின்றி இன்றியமையாது நுகரத்தக்கதுமாகிய கொடிய தீவினையின்பயனே இஃதென்று நினைக்கின்றேன். † பேறிலளாகிய நீ மீண்டும் நின் அன்பிற்குரிய நாயகனைக் காண்டற்கு வலியற்றவளாகின்றாய். தலைவற்பிரிவானுண்டாய துன்பம் உண்மையிற் பொறுக்கத்தகாததே; ஆனால், இவ் வஞ்ஞான உலகம் கழிந்ததற்கு இரங்குந்தன்மைத்து. அறிவறிந்த நின்முன்னிலையிற் பேதையாகிய யான் இங்ஙனங் கூறுதற்கு நாணம் எய்துகின்றேன். ஆயினும் பன்னாட் பழக்கத்தாற் காரணமின்றியுண்டாய அன்புரிமையே என்னை இங்ஙனஞ் சொல்விக்கின்றது. இக்கவற்சி நீங்குக. தேறுதல் எய்துவாயாக" என்று தேற்றினாள்.

---

* கழுவாய் - பரிகாரம்.

† பேறு - நல்லூழ்ப்பயன். பின்வருவனவும் இப்பொருள.

பின்னர்ச் சுலோசனை உடனிறத்தற்குத்துணிந்து ஈம விறகு அடுக்குதற்குத் தோழிமார்களை அடுத்தடுத்து வற்புறுத்தினள். தோழிமார்களெல்லோருந் துன்பத்தால் வாய்வாளாதிருந்தழி, ஒருத்தி சுலோசனையின்பக்கல் மெல்லமெல்ல எய்தி வணக்கத்துடன், "ஏழாய்! முன் நிகழ்ந்தவற்றை யறியாமலும், இறந்த தலைவனது முகத்தைக் காணாமலும், காதலர்க்குநேர்ந்ததை உண்மையாகத்துணியாம லும், இக் கைத்துண்டு யாருடையதென்று ஆராயாமலும், யாரான் எதற்காக ஈண்டு எறியப்பட்டதென்று எண்ணாம லும் இடுக்கணான் அலந்த நெஞ்சத்தினையுடைய நீ, உட னிறத்தலையே துணிவுற்று ஆராயாதுசெய்கின்ற நின் எண் ணத்தைத் தடுக்கின்றேனில்லை" என்று இங்ஙனம் அறிவுறுத் தினள். அம்மொழிகேட்ட மாது "நன்குபதேசிக்கப் பட்டது" என்றுபெருமைப்படுத்தி, "நிகும்பிலையில் வேள்வி முடித்தற்கன்றே இங்கிருந்து என்நாதன் புறப்பட்டான். ஏழையாகிய யான், அவன்செயலை எவ்வாறு உணர்வேன்? யாரை வினவுவேன்? என்தலைவனது செய்தியை அறிவிப் பவர் யார்? யாண்டுச் செல்வேன்? பேறிலளாகிய யான் காதல னது செய்திகளை எம்முறையான் எங்ஙனம் நுணுகி ஆராய்ந்து எவ்வழியான் உணர்வேன்?" என்று துன்பத் துடன்கூறிச் சிதறுகின்ற தூய முத்துக்கூட்டங்களைப்போற் கண்ணீர்த்திவலைகளை யுதிர்த்துத் துன்பமிகுதியாற் பொறி கலங்கித் திங்கண்மண்டிலங் கூதிர்காலத்து முகிலான் மறைக் கப்பட்டதுபோற் பாம்புரியன்ன மெல்லிய வெள்ளிய ஆடையான் முகத்தைமறைத்துத் "தேறுதலடைவாயாக" என்று அணிமையிலுள்ள தோழிகளால் அடுத்தடுத்துக்

கையினாற் றைவரப்பட்டு, ஒவ்வொருக்ஷணமும் மெலிவெய்தி, அவ்வமயஞ் செயத்தக்கதின்னதென்று அறியாளாய்ச் சிறிது நேரம் பாழடைந்தமனத்தினளாயினள்.

பின்னர், மிகச் சிரமமுற்று மனத்தையடக்கித் தலைவனது செய்தியையறியும் விருப்பமுடையளாய்த் "தீயூழின் கேடுபயக்குஞ்செயல் அந்தோ! மிகக்கொடியது. நாயகனது இக் கைத்துண்டினை நோக்கியே அன்னான்செய்திகள் எல்லாவற்றையும்பற்றிக் கேட்கிறேன்" என்று துணிவுற்று, வாட்படையேந்திய அக்கையினை மும்முறை வலம்வந்து நெற்றி நிலத்திற்றோயப் பணிந்து, தலையிற்கூப்பியகையுடன் "எல்லாப் பகைவர்களையுங் கொல்லுதலாற் றன்வலிமையை வெளிப்படுத்துகின்றதும், வாட்படையால் அணிசெய்யப்பட்டதும், விண்ணவர்தலைவனைத் தன்புகழ் பாடுபவனாகப் பெற்றதுமாகியஎன்நாயகனது கைத்துணடிற்கு நலமுண்டாக. ஒவ்வொருகணமும் வளர்கின்ற நாயகவியோகமாகிய அக்கினியின் எரிகொழுந்தால் எரிக்கப்படுகின்ற உறுப்புக்களையுடையவளும், மிகவுங்கொடிய தீயூழாற் பண்ணுட்பட்டழிகிய அன்பின் சுவைக்கு நிலயமாகிய காதலனது உடனுறைவினின்றும் எதிர்பாராது வேறுபடுக்கப்பட்டவளும், இறப்பினும் மிக்க துன்பத்தைத்தருந் தலைவனதுபிரிவை யாற்றாதவளும், செவியைவெதுப்புகின்ற கணவனதுமரணசரிதத்தைக்கேட்டவளவிலேயே உடனிறப்பதிற் றுணிவுற்றவளும், தாமரைமலர்போன்ற அவன்முகத்தைக் காணாமல் உடனிறப்பதினைப் பது தகுதியின்றெனவெண்ணுகின்றவளும், அவன்முகத்தைக் காண்டற்குத் தக்கநெறி யின்னதென்றறியாதவளும், வேறு புகலிடமில்லாதவளும், நின்னையே புகலாகஅடைந்தவளுமாகிய

இத்தகைய இவள் கண்ணீரொழுகக் கைகூப்பி வணங்கிப் பெருமைதோன்ற நின்னை இரக்கின்றாள். அருள்செய்து சொல்வாயாக. ஓ! என்தலைவனது வலக்கையே! உலகத்திற் சிறந்தவீரனும் அடுத்தடுத்துநேர்ந்த மிக அஞ்சத்தக்க போர் முனையில் விண்ணவர்களை மிகக்கூரியபகழிகளாற் சிதறஅடித் தவனுமாகிய என்காதலன் எவனாற்கொல்லப்பட்டான்? பே றிலளாகியயான் அவன்முகத்தைக்காண்டற்கு யாதுசெய்தல் வேண்டும்? எவ்விடத்து அடைதல்வேண்டும்?" என்று வணக் கத்துடன் தெரிவித்தாள்.

ஒவ்வொருகணமும் மறுமொழியை யெதிர்பார்த்தும் ஒன்றுங்கேட்கப்படாமையால் இருமடங்கதிகமான துன்ப மெய்தி "ஏ! வலக்கையே! எவ்வாற்றானுங் கொடியையாகின் றாய்! கண்ணோட்டமேற்கொண்டிலை. நீ என்றலைவனதுகை யென்பதும், பேறிலளாகிய என்னிடத்து எனது பிராணபதி க்கு இயற்கையிற்றோன்றிய அன்புண்டென்பதும் உண்மை யாயின் எனக்கு மறுமொழிதருவாயாக" எனக் கூறினாள்.

அக்கைத்துண்டு, அமங்கலமானசொல்லை அவள் கேட்ப தற்குப் பிரியமில்லாததுபோலப் பின்னரும் மோனமுற் றிருக்குங்கால் ஆற்றொணாத்துன்பமும் சினமுமேற்கொண்டு, சிறிது கண்சிவந்து, தளிர்போன்ற அதரங்கள்துடிக்க, எல்லா உறுப்புக்களையும்பற்றிய வெதுப்பத்தால் உடல்நடுங்கி, மீண் டும் எழுந்து, தலைவனை நெஞ்சால் தியானித்து, "என்னாற் பன்முறை வேண்டப்பெற்றும் இக் கைத்துண்டு எனக்கு மறுமொழி தந்திலது. ஆ! காலத்தின்மாறுபாட்டுத்தன்மை யென்னை! நிற்க; மீண்டும் வஞ்சினத்துடன் கேட்கின்றேன்.

ஏ! கைத்துண்டே! கைப்பிடித்தவன்றுதொட்டு இன்றுவரை இன்பத்திலுந் துன்பத்திலும் எனது பிராணகாந்தனையன்றி வேறொன்றையுங் கருதிலேன் என்பதூஉம், ஒருபொழுதும் எனதுகணவனையன்றி வேறொருவனை நெஞ்சத்தாலும் நினைந்திலேன் என்பதூஉம் உண்மையாயின் எனக்கு மறுமொழி தருவாயாக" எனக்கூறி ஒழிவெய்தினள்.

பின்னர், நொடிப்பொழுதில், மானமிக்கோரிற் சிறந்த இந்திரசித்துவின்கைத்துண்டு, கற்பரசிகளுட்சிறந்த சுலோசனையினது மிகக்கடியதும் முன்கேட்கப்படாததும், கேட்டவளவினே சல்லியபாணம்போல நெஞ்சத்தை வருத்திப் பிளப்பதூஉமாகிய அச்சொல்லைக் கேட்டு, அதிவிரைவில் நிலத்தினின்றுமெழுந்து, மின்னற்குழுவாற் செய்யப்பட்டது போல் ஒளிசெய்கின்ற அவ்வாட்படையைக் கீழ்முகமாகத் திருப்பி மிகக்கூரிய அதன்நுனியால் "ஏடி! சுலோசனே! முதலில் நின்கண்களைத் துடைத்துக்கொள்க. என்செய்திகளைப் படிப்பாயாக. இதோ எழுதுகின்றேன். அன்புரையாடுங்காதலி! அறிவுமிக்க நின்னால் 'இக்கேட்டைவிளைக்குஞ் செயலினின்றும் ஒழிகஒழிக' என்றுஉரைக்கப்பட்டதன்றோ! நலத்தைவிரும்புகின்ற நின்உபதேசங்களைச் சேய்மையின் ஒதுக்கிப் போர்த்தொழிலையே மேற்கொண்டு நிகும்பிலையில் ஆபிசாரவிதியினாற் செய்யப்பட்ட வேள்வித்தீயினின்றும் விடுபடை கைபபடை முதலியஆயுதக்கூட்டங்களானிறைந்து மாயையான் ஆக்கப்பட்ட தேரைப்பெற்றுப் போர்செய்ய விரும்பியயான் அவ்விடத்தையடைந்து நெருப்பை விரைவிற் கிளர்வித்துப் பொரி, எள்ளு, சமித்து, தருப்பை, நெய்

முதலியவைகளால் ஓமஞ்செய்து இறுதியிற் பெரிய ஆட்டின் கொழுப்பினுற் பூரணுகுதியைக்கொடுத்தற்குமுயன்றுகொண் டிருக்குமிடையில், எனது சிறியதந்தையிடமாக எல்லா நிகழ்ச்சிகளையுமுணர்ந்த இராமனுல் ஏவப்பட்டு என்னைக் கொல்லவந்த இலக்குமணன் அங்கு விரைந்து போந்து மிகக் கடிய கன்மழையினுமிகுதியாகப் பாம்புகளின் நஞ்சாகிய தீயைக் கக்குகின்ற அம்புமாரியை என்பாற் பொழிந்தான்.

அவ்வமயத்திலும், எங்ஙனமாயினும் வேள்வியை முடித்து இவனேடு போர்செய்தல்வேண்டுமென்னும் உறுதி யையும், வேள்வியினையிலேயே பற்றிய மனத்தினையுமுடைய யான் பெருகுகின்ற நெய்யொழுக்கத்துடன்கூடிய பெரிய ஆட்டின்கொழுப்பைக் கையினுல் உயரவெடுத்தேன். இவ் வாபிசாரவேள்வி நிறைவேறுமாயின் என்னை என்றுங் கொல்லமுடியாதென்பதை உணர்ந்த அவ்விலக்குமணன் விரைவில்வந்து மிக்கவிரைவுடன் தூக்கியகாலுதையால் அவ் வவியை என் கைத்தலத்தினின்றுஞ் சேய்மைக்கண்ணெறிந் தான். அப்பொழுதே கிளர்ந்தெழும் சினத்தினையுடைய யான் மீண்டும் வேள்வியின்முயலல் அறியாமையின்பாலதாம் என்று துணிவுற்று என் சினமாகிய நெருப்பில் நின்னை ஓமஞ்செய்வேனென்று அவனேடு போர்புரியத்தொடங்கி னேன். அப்போர்த்தொடக்கத்திற் கிளர்கின்ற கோபத்தை யுடைய எம்மிருவர்க்கும் அம்புகளாலும், தண்டங்களாலும், கைகலத்தலாலும், நெடுநேரம் யுத்தம் நடைபெற்றது. மிக்க மாயாவியும் மூவுலகத்திலுஞ் சிறந்த வீரனுமாகிய என்னைக் கொல்லுதற்கு வலியற்றவனுகிய இலக்குமணன் ஊழித் தீயினையொத்த ஓரம்பை வில்லிற்பூட்டி 'ஏ! பகழியே! தசரத

குமாரனாகிய இராமன், அறவோனும், உண்மையாளனும், ஆண்மையில் நிகரற்றவனும் ஆவன் என்பது உண்மை யாயின் இவ் விராவணகுமாரனைக் கொல்வாயாக' என்று வஞ்சினங்கூறி என்பால் விடுத்தான். வில்லினின்றும் வெளிப்பட்ட அவ்விராமபாணம் அச்சத்தைவிளைக்கும் ஒலி யினையுடையதாய்ப் பாம்பின் நஞ்சையொத்த தீத்திரளைக் கக்கிக்கொண்டு இடிவீழ்தல்போல் என்பால் வீழ்ந்து, என் தலையைத் துணித்து, அதனை இராமபிரானது திருவடித் தாமரைகளிலும், இவ்வலக்கையைத் துணித்து நின்பக்கலி லும் வீழ்த்தியது. அவ்வம்பாற்றுணிக்கப்பட்ட என்றலை, அரக்கர்குலத்துத் தூமகேதுவும், கதிரவன்குலத்துத் தலை மணியுமாகிய இராமபிரானது திருவடித்தாமரைகளை யடுத்த லால்வரு மின்பத்தை நுகர்ந்து அளவிலாப் பேரின்பத்தை யடைகின்றது. நங்காய்! நீயும் விரைந்து வருவாயாக. இராமபிரானது திருவடிகளை யெய்தலால்வரும் இன்பத்தை நுகர்வாயாக. பிறப்பைப் பயன்படுத்துக. மணம் நிகழ்ந்த ஞான்று அன்புடன்பற்றிய எனது இவ்வலக்கையை யெடுத் துக்கொண்டு விரைந்து வருவாயாக" என நிலத்தில்வரைந்து மீண்டுஞ் சுலோசனையின்முன்னிலையிற் பூமியில்வீழ்ந்தது. அங்ஙனமெழுதப்பட்ட தன் றலைவனது செய்தியை அன்பு பெருகப் படித்துக் குப்பாயம் போர்த்ததுபோல் மயிர்ப் புளகமுற்றவுடலையும், இடைவிடாது அழுதலாற் பருத்த கண்களையுமுடைய அச்சுலோசனை, பாழடைந்தாள்போலும், மயக்கமுற்றாள்போலும், ஓவியத்துற்றாள்போலும், அசை வறுநிலையை யண்மினாள்போலும், நெடுநேரம் எல்லாப் பொறிகளின் றொழில்களும் ஒடுங்கப்பெற்று இருந்தாள்,

அவள் தோழிமார்களெல்லாம் மிக்க வியப்பைத் தருகின்றதும், முன்னிகழாததுமாய இந்நிகழ்ச்சியைப் பார்த்துக் கற்பரசியாகிய அச்சுலோசனையினது பிறரிடத்துக் காண்டற்கரிய கற்பின்மேம்பாட்டைப் பாராட்டினார்கள்.

பின்னர், இவள் முகூர்த்தப்பொழுதிற் கண்களை விழித்து "இனிக் காலந்தாழ்த்தல் கூடாது; கட்டளையிட்டவாறு நடத்தல்வேண்டும்; இப்பொழுதே என் மாமன்பக்கலெய்தி இறந்த என் கணவனது சிரசைக் கொணரும்படி வேண்டிக்கொள்வேன். ஆதலிற் சிவிகையைக்கொணருங்கள். இக்கைத்துண்டினை யேற்றுங்கள். என் மாமன் யாண்டுள்ளாரோ ஆண்டு விரைந்துசெல்வோமாக" என்று சொல்லிக்கொண்டு பல்லக்குக் கொணர்தற்பொருட்டுத் தோழிகளுக்குக் கட்டளையிட்டாள்.

அக்கணத்திலே கொண்டுவரப்பட்ட இரத்தினசிவிகையில் அக்கைத்துண்டினைச் சிறப்புடனேற்றி அப்பல்லக்கை நான்குவேலைக்காரிகளாற் றாக்குவித்துத் தோழிகள்சூழ அடிவரையும் *குப்பாயத்தால் மறைக்கப்பட்டவுடலையும், மூச்சுக்காற்றின் வெம்மையால் நிறம் வேறுபட்ட அதரங்களையும், தடையின்றிப் பெருகுகின்ற கண்ணீர்வெள்ளத்தா லனைக்கப்பட்ட மேலாடையையும், யமுனையாற்றுவெள்ளம்போற் கறுத்துத் தோட்பக்கங்களிற் றுவண்டு சிதறுண்டு கிடக்கின்ற கூந்தலையும், பன்முறை மார்பின்கண் அடித்துக் கொள்ளுதலாற் றளிர்போற் சிவந்த கைகளையும், நெல்லிக்கனிபோற்பருத்த முத்துக்களாலாய மாலையாகிய அணிகல

* குப்பாயம் - சட்டை.

யையுமுடையவளும், "ஆ! நாத!" என்று பன்முறை புலம்பி, முககமலத்தைக் கைத்தலத்தான் மறைத்து, ஒருத்தி தாமரை யிலையில் நீர்தாங்கிவர, ஒருத்தி சாமரையுள்ள வாழையிலையா னுகிய சிவிறியைத் தாங்கிவர, ஒருத்தி மேலே விழுகின்ற கடுங்கதிர்க்கிரணத்தைத் தடுக்கவிரும்பித் தூக்கப்பட்டதும், அத் துன்பநிலைக்குரியதுமாகிய கறுப்புக்குடையைத் தாங்கி வர, வேறுசிலர் சோகத்தால் வேறுபட்டு வாய்வாளாது நெருக்கமின்றிச் சூழ்ந்துவர வரம்பிகந்த தனது துன்பத்தால் எல்லோருடைய மனத்தையும் வருத்துகின்றவளும், இரக் கத்திற்கு அதிட்டானதேவதைபோற் கட்புலனுக்குத் தோன்றுகின்றவளும், கற்புருக்கொண்டாற்போல் நாயகற் பிரிவானேர்ந்த துன்பத்தாற் கலக்கமுறுகின்றவளும், ஒவ்வொருகணத்திலும் மூங்கைபோலவும், அறிவிலாள் போலவும், மயக்கமுற்றுள்போலவும், பேய்கோட்பட்டாள் போலவும், பாழடைந்தமனத்தினள்போலவும், கவலைக் கடலுண் மூழ்கினுள்போலவும் தடுமாறுகின்றவளும், யாவ னுயினும் ஒருவன் தன்றலைவனது சரிதத்தைத் தெரிவிப் பான் என்று புதிய கருங்குவளைமலர்போல் அழகிய அகன்ற விழிகளை நாற்புறமும் பரப்புகின்றவளும், "இன்னும் எத்துணைத்தூரத்தில் என் மாமனது அரசிருக்கைமண்டபம் உள்ளது" என்று ஒவ்வொருகணத்திலும் தோழிகளைநோக்கி வினவுகின்றவளும், சிறிதுபொழுது இரக்கத்துடன் கதறு கின்றவளும், சிறிதுபொழுது நெட்டுயிர்ப்பெறிகின்றவளும், ஆகிய சுலோசனை தோழிகளான் மிக்கசிரமத்துடன் தாங்கப் பட்டு இராக்கதசக்கிரவர்த்தியாகிய இலங்காநாயகனது அத்தாணிமண்டபத்தின்பக்கலை யடைந்தாள்.

ஆண்டுள்ள ஒளிர்கின்ற பொன்னாலியற்றப்பட்ட அத்தாணிமண்டபத்தின்நடுவண் நவமணிகள் அழுத்திய அரியணையில்வீற்றிருக்கும் இராவணனை, மிக அணிமைக்கண்ணுள்ள ஓர் இருக்கையில் வீற்றிருக்கின்ற பதிவிரதாசிரோமணியாகிய மந்தோதரி, இயற்கை வனப்புவாய்ந்து வணக்கத்துடன்கூடிய பற்பலஉபதேசமொழிகளாற் றடுத்தும் அவன் சானகியின்பால்வைத்த பற்றுள்ளமுடையனாய், "ஏடி! அறிவிழந்த மந்தோதரி! நீ இங்ஙனங்கூறுத லென்னை? உயிர்விடினும் ஒருபொழுதும் சானகியை விடேன். வீரர்களுட் சிறந்த நம் புதல்வன் நிகும்பிலையில் விதிப்படி செய்யப்பட்ட வேள்வித்தீயினின்றும் எய்திய தெய்வத்தன்மைவாய்ந்த தேரையுடையோனாய்ப் போர்க்களத்தில் இராமலக்குமணர்களை நிச்சயமாகக் கொல்லுவான். பின்னர் வேறு புகலில்லாது இறத்தற்குஅஞ்சுகின்ற அப்பெண்மணியாகிய சானகி, தானேபோந்து என்னை யின்புறுத்துவாள். என் அவாவையும் நிறைவேற்றுவாள்" என்று கூறினான்.

செவியை வெதுப்புகின்ற அம்மொழியைக்கேட்ட மந்தோதரி, "நாத! சிவபிரானை மகிழ்வுறுத்திய தோள்வலியினையுடைய நினக்கு இஃது தறமன்று. சனகன்புதல்வி, கற்புமிக்கநங்கையருள் தலைமணியன்றோ! கற்புக் காட்டுத்தீ போன்றதன்றோ! கற்பரசிகளின் சரிதம் மிக்க வியப்பினையும் சிறப்பினையும் உடையதன்றோ! நூற்றுக்கணக்கான வீரர்கள் போர்க்களத்தில் இறந்ததை நோக்குவாயாக. தசரதன் புதல்வர்கள் மக்கட்டன்மையினர்களாகவும், சனககுலத்தை மகிழ்விக்கும் சீதை சாமானியமான ஒரு பெண்ணாகவும் இருப்பார்களாயின், இவையெல்லாம் எங்ஙனம் நிகழும்?

ஆதலின் உலகத்திற்கு இன்பம் பயக்கும் இராமனை எல்லா வுயிர்களுக்கும் இதஞ்செய்யும் விருப்பத்தால் நிலத்தில் அவதரித்த திருமாலாகவும், சானகியைப் பூவுலகத்திற்குத் தாயாகிய பாற்கடற்பிறந்த இலக்குமியாகவும், அறிவாயாக. உருவமே மனிதவியல்பைக் கடந்ததென்று அறிவிக்கும் சீதையை இராமபிரானிடம் வணக்கத்துடன் சேர்ப்பிப்பாயாக. தனது கற்பினுலாகிய புகழினுற் பத்துத்திக்குக்களையும் வெள்ளியவாகச்செய்த விதேககுலத்துக்கு மங்கல விளக்காகிய சீதையின்பால் இவ்வாறு ஐயுறுதற்கு நின்மனம் முயல்கின்றதென்னை? இத்தகைய நின்னறிவு நலமுடையதன்று. ஒருபொழுதும் இன்பந்தருவதுமன்று. நலன்றருஞ்செயலைத் தொடங்குகின்ற ஆடவன்எச்செயல்களினும் நேரத்தக்க நன்று தீதுகளை நுனித்துணர்கின்றானன்றோ! இந்நிகழ்ச்சியில் ஈது எடுத்துக்காட்டாகும். மிக்க வன்மை வாய்ந்த எத்தனையோ வீரர்கள் போர்முகத்தின் மாண்டனர். ஆற்றுெணுத் திண்மையினையுடைய நினது உடன்பிறந்தானாகிய கும்பகன்னன், நால்வகைப் படைகளுடன்சென்று தக்கவாறு போர்புரிந்தும், விலங்கினங்களைத் துணையாகப் பெற்ற இராமனுற் போர்க்களத்தில் இறந்தான். குமாரனாகிய மேகநாதன் முதலில் மிக்க மானக்கேட்டையடைந்து, சானகியை விடுதற்பொருட்டு நின்னைப் பல்லாற்ருனும் வேண்டியும், நீ மறுத்துரைத்த கடுஞ்சொற்களை யாற்ருதவனுய், உயிரையுந் துரும்பாகக் கருதிப் போர்செய்தற்பொருட்டு மீண்டும் ஓடினுன். மீண்டும் அவனை வாழ்நாளுடையனுகக் காண்பேனே? காண்கிலேனே? அறியேன். இன்னுந் தீநெறிக்கட்செல்லும் அறிவைத் திருப்புதற்கு

ஆற்றலில்லாயாயின் நங்குலம் வேரோடு கேடுறுமென்ப துறுதியே. ஆதலின் இக்கேட்டைவிளைக்குஞ் செலவினின்றும் நீங்குவாயாக. மிக்க எழில்வாய்ந்த இவ்விராச்சியம் விரிவுடையது; நிரம்பிய இச்செல்வமும் பிறர்க்கு அமையாதது; வணக்கமிக்க ஏவலாளர் பலருளர்; ஆணையும் விட்புல வேந்தன் முடிமணியில் விளங்குவது; புகழ் எல்லாத் திசைகளிலும் நின்று நிலவுகின்றது; வரலாறு மக்களனைவரையும் வியப்புறச்செய்வது. அனைத்தையும் ஓரமயத்திலேயே பயனற்றனவாகச் செய்யற்க. விரைந்து சானகியைச் சமர்ப்பணஞ்செய்வாயாக. தசரதன்புதல்வர்களிடத்து நட்பைக் கொள்வாயாக. நீண்டகாலம் இவ்வரசுரிமைத்திருவை நுகர்வாயாக” என்று அன்புடன் கூறினள்.

இராவணன் தனதுசெயல் பொருத்தமற்றதென்றறிந்தும், காலமாறுபாட்டால், அன்புடன் கூறப்பட்டனவாயினும் மந்தோதரியின் மொழிகளை வெறுத்துத் தள்ளினன்.

ஆ! ஆ! நமது அத்தாணிமண்டபத்தின் அணிமைக்கண் எய்திய சுலோசனையை மறந்து மிகவுங் காலங்கடந்துவிட்டேம். ஆண்டு அக்கற்பரசி எத்துணைக்காலமிருப்பள். ஆதலின் அவள் உள்ளே புகுக. பின்னர் யாதுநேருமென்று அறிவதற்கு நாமும் அவளுடன் முற்படுவேமாக.

சூர்கொண்ட புதியமேகம்போன்ற கரியகுழற்கற்றையாலும், கார்காலத்து நிறைமதிபோன்ற அழகிய முகத்தானும், இளம்பிறைபோல் எழின்மிக்க நெற்றியானும், விற்கொடியோவென்று ஐயுறுத்தும் புருவங்களானும், அசைகின்ற கருங்குவளையிதழ்போல் வனப்புமிக்க கண்களானும்,

சண்பகத்தினரும்புகொலோவென்னும் ஐயத்தைவிளைக்கும் மூக்கானும், கண்ணாடியொத்த கதுப்புக்களானும், பவளக் கொடிபோன்ற அழகிய அதரங்களானும், சங்கத்தையொத்த கழுத்தானும், பந்துபோறறிரண்ட பயோதரங்களானும், கொடிகளையொத்த கைகளானும், மும்மடிப்பான் அழகு செய்யும் இடையானும், புளினதலத்தையொத்த நிதம்பத்தா னும், வாழைத்தண்டுபோ லழகிய தொடைகளானும், தாம ரைப் பூப்போன்ற அடிகளானும் விளங்குகின்றவளும், நடை யால் அன்னத்தையும், இன்சொற்களாற் குயிலையும், தலைவ னிடத்துள்ள அன்பால் அன்றிற்பேட்டையும், யாவரையும் தன்வயமீர்த்தலால் மந்திரசித்தியையும் ஒத்துத் திகழ்கின்ற வளும், அழகிய உருவச்சிறப்பினாலும், ஒப்பற்ற எழிலானும், இனிய சொற்களானும், உயரிய பெருந்தன்மையானும், இயற் கையின்வாய்ந்த நல்லொழுக்கத்தானும், மாட்சிமிக்க கற்பினு னும்— பலவாறுகூறுவ தென்னை? — எல்லா வகையானும் சானகியையொத்து விளங்குகின்றவளுமாகிய சுலோசனை, அத்தாணிமண்டபத்தின்வாயிலை மெலலவெய்தி இராவணனது அவைக்களத்திற் புகுந்தாள்.

இரங்கற்குரிய அச்சுலோசனையைப் பார்த்த இராவணன் மந்தோதரியை நோக்கி "ஏடி! மதியற்ற மந்தோதரீ! நீ சிறி தும் அறிந்திலை. தக்கதின்ன தகாதன வின்னவென்று ஆராய்ந்திலை. இந்திரசித்துவின் வலிமையை உண்மையி லுணர்ந்திலை. பார்க்க! பார்க்க! வீரருட்சிறந்த நம்புதல்வனாற் போரில் இராமலக்குமணர்கள் இறந்தமைகேட்டு, என்பால் அருள்பெறற்பொருட்டுச் சானகி ஈண்டே வருகின்றாள். இப்

பொழுதே எனது அவா பயனுடையதாயிற்று. இப்பொழுதே செயத்தக்கசெய்தவனைப்போல என்னைப் பார்க்கின்றேன்" என்று மொழிந்தான். அங்ஙனம் வருகின்ற நங்கையை நோக்கி மந்தோதரியும், சானகியென்று சிறிதுமயங்கினாள். இதற்கிடையில், சுலோசனை அணிமைக்க ணெய்தினாள். அப்பொழுதும், இராவணன் அவளைச் சானகியென்றே துணிவுற்றான். மந்தோதரி, அம்மாதை நன்றாகப்பார்த்துத் தன் மருகியென்றுணர்ந்து, "புலத்தியகுலத்தரசே! இம்மங்கையை நீ நன்றாக அறிந்திலை; இவள் சானகியல்லள்; நம் புதல்வன் மேகநாதனது அன்புமிக்க காதலியாகிய நமதுமருகி; தன்னெழில் நலத்தாற் சானகியையொப்பாள். கதிரவன்முகங் காணார்களன்றே இராசபத்தினிகள். *உவளகத்திலேயிருந்து எங்ஙனம் ஈண்டு வருகின்றாள்? நன்றாக ஆராய்ந்துநோக்கின், துன்பத்தால் வாடியமனத்தினள்போலக் காணப்படுகின்றாள். இந்நங்கை உடலை யணிந்துகொள்வதில் விருப்பமற்றவளாகத் தோன்றுகின்றாள். ஆதலானன்றே, நெற்றியிற் றிலகங் காணப்படவில்லை; குழல் பின்னப்பட்டிலது; முககமலம் வாட்டமுற்றிருக்கின்றது; கண்கள் நீர்ப்பெருக்கான் மலர்ச்சி குன்றின; உடற்கொம்பு துன்பத்தால் வாட்டமுற்றுளது: நேர்ந்தஇடையூறு யாதோ வறிகிலேன். எக்காலத்தும் இவள் உவளகத்தினின்றும் வெளிப்போந்திலள். இத்தகைய வேடத்துடன் இங்கெய்திய இவளைப் பார்த்தமையான், போர்குறித்துச்சென்ற புதல்வனைப்பற்றி அன்புவயப்பட்ட என்னெஞ்சம் அமங்கலத்தை யையுறுகின்றது. ஆ! என்செய்வல்!

*உவளகம்—அந்தப்புரம்.

இவ் வாட்டமிக்க பெண்மணி எத்தகைய செய்தியைத் தெரிவிப்பாளோ?" என்று பகர்ந்தனன்.

இங்ஙனஞ் சொல்லியவுடனே சுலோசனை ஆண்டடைந்து துன்பத்தான்மூடப்பட்டதன்னிலையை அரிதிற்றகைந்து, பல்லக்கிற்றுங்கிவந்த அக் கைத்துண்டினை, இராவணன்முன்னிலையில்வைத்து, மாமன் மாமி யிருவர்களையும் வணங்கிச் சிறிதுதூரத்தினின்று அடித்தலநோக்கிய கண்களையுடையளாய்த் தழுதழுத்தகுரலுடன், "அரசர்பெரும! பேறிலளாகிய நினதுமருகி சுலோசனையென்னும் பெயரினையுடைய யான் இங்குப் போந்தேன்; எக்காரணத்தை முன்னிட்டும் இதுகாறும் உவளகத்தினின்றும் வெளிச் செல்லும் நிலைமைய ளல்லேன்; இப்பொழுதோ ஆற்றொணுத் துன்பத்தால் வருந்தி, நாணத்தைச் சேய்மைக்க ணொழித்து, வணக்கமாகிய செல்வத்தைச் சிறிதும்பொருட்படுத்தாமல் நற்குலத்துதித்த பெண்பாலரின் இயல்பை முற்றும் ஒழித்து என்னிலையை மிகவும் அடக்கித் தன்வயத்தினள்போலவும், அறிவிலாள்போலவும், நினதுதிருமுன் எய்தினேன்; தெரிவித்துக்கொள்ளவேண்டிய தொன்றுளது. அளியால்நனைந்த மனத்தான் அருள்க. நினைவுகூர்தலாகிய வன்மையால் என்னை அநுக்கிரகிக்க. என்சொற்களைக் கேட்டல்வேண்டும். அவாவை நிறைவேற்றல்வேண்டும். போர்க்களத்தில் இராமலக்குமணர்களை வெற்றிகோடற்பொருட்டு நிகும்பிலையில் ஆபிசாரவேள்விசெய்தற்குப் புறப்பட்ட என்காதலன் வழியிடையே என் இல்லத்தை அடைந்தான். என் உபதேசமொழிகள் எல்லாவற்றையும்வெறுத்தொதுக்கி நிகும்பிலையை அடைந்த இந்திரசித்து, சுமித்திரைபுதல்வனாற் கொல்லப்

பட்டான். ஈதன்றே மூவுலகத்தினுஞ் சிறந்தவீரனாகிய நின் புதல்வனது கைத்துண்டு. யான், அவனது மரண நிகழ்ச்சி முழுதும் எழுதிய பத்திரிகை இதுவாகும். இவ்வெல்லா நிகழ்ச்சிகளும் இக் கைத்துண்டினாலேயே தன்கையிற்றாங்கிய கூரியவாண்முனையால் நிலத்தில் நன்றாக எழுதப்பட்டன வாகும். யானோ என்தலைவனது தலையைக் கண்டு அப் பொழுதே அவனுடன் இறத்தலைவிரும்புகின்றேன். ஆத லின், அருள்செய்க. என்தலைவனது தலையைக் கொணர்தற் பொருட்டு விரைந்து கட்டளையிடுங்கள்” என்று கூறித் தன் கைத்தலத்துள்ள பத்திரிகையொன்றை அவன் முன்னிலையில் வைத்தாள். இந்திரசித்துவின் மரணநிகழ்ச்சிகேட்ட அளவி னுனே மந்தோதரியின் இதயம் இருகூறாகப் பிளக்கப் பட்டது. அப்பொழுதே அறிவை மயக்கங்கவர்ந்தது. “ஆ! புதல்வ! மேகநாத!” என்று கதறிப் பெருங்காற்றான் அலைப்புண்ட வாழைபோல நிலத்தில்வீழ்ந்தாள்.

இராவணனுந் தானே அப்பத்திரத்தைப் படித்து உலகம்புகழுந் திண்மைமிக்க தன் புதல்வனது இறப்பு நிகழ்ச்சியை முதலில் நம்பாமல், பத்திரிகையில் வரைந்த பொருளையும் வெறுத்துத்தள்ளிச் சிறிது நினைவுகூர்ந்து, தன் மகனது நாமவிலச்சினையுடைய கொடிபோன்ற வாளால் அணிசெய்யப்பட்ட கைத்துண்டினையும் பார்த்து, அசைவறு நிலையன்போலவும், ஓவியத்துற்றான்போலவும், இடியாற் கெடுக்கப்பட்டவன்போலவும் அசைவற்றிருந்து, ‘ஆ! கேடு விளைக்கும் அவாவினையுடைய யான் கெடுகின்றேன்’ என்று பத்துமுகங்களாலும் உரக்கக் கதறினான். “ஆ! குழந்தாய்! மேகநாத! யான் உயிருடையனாயிருக்கும்பொழுதே நீ

நினைவுறும்நிலையை எய்தினாய்; பேறிலனாகிய எனது தீவினைப் பயன் வெறுக்கத்தக்கது; நின்பெயர் கேட்டவளவிலே தேவாசுரர்களையுடைய எல்லா உலகங்களும் அச்சத்தால் நடுக்கமுறும்; அத்தகைய நீ, காடி குரங்கு இவைகளின் முன்னிலையில் மனிதரில் இழிந்த ஒருவனால் எங்ஙனங் கொல்லப்பட்டாய்? ஆ! அஞ்சத்தக்க திண்ணிய நினது கொடிய மரணத்தைக்கேட்டு என்மனம் மிகவுங் கலக்கமுறு கின்றது. பிறரால் ஆற்றொணா வலிமைமிக்க நீ போரில் அவ் விராசகுமாரர்களை விளையாட்டாகத் தோல்வியுறச் செய்து, மகிழ்ச்சியுடையனாய்வந்து என்னை யின்புறுத்து வாய்; அரசியலின்பத்தையும் நுகர்வாய் என்று உவகையுற் றிருந்த கெடுநினைவினனாகிய எனது பேராவாவென்னும் பெருமரம் வேருடன் களையப்பட்டது" என்று இங்ஙனம் நெடுநேரம் புலம்பினான்.

பின்னர்ச் சிறிதுநேரஞ் சென்றதும், சுலோசனை மீண்டும் தன்றலைவனது தலையைக் கொணர்தற்கு இரந்தாள். அவள் சொற்களைக்கேட்டுப் புத்திரசோகத்தாற் கலக்குண்ட எளியனாகிய இராவணன், சினத்தாற் கிளர்ந்தெழுந்து, "அடி! ஒழுங்கிழந்தவளே! போர்க்களத்தினின்றும் அவன்றலையைக் கொணர்தலைப்பற்றி இரக்கின்ற நினது கடுஞ்சொற்களைக் கேட்டலால் எத்துணைத் துன்பம் விளைகின்றதோ, அத் துணைத்துன்பம் வீரகுல சூடாமணியாகிய என்புதல்வ னிறந்தான் என்னும் இதனால் விளைந்திலது. அமயத்திற் குரியசெயலைச் சிறிதும் ஆராயாது இங்கெய்தி இங்ஙனங் கூறுதற்குரிய நெஞ்சுறுதியை எவ்வாறு கடைப்பிடித்தாய்?

அறிவிலாய்! என்பக்கலினின்றும் அப்புறம்செல்க" என்று அவளை அச்சுறுத்தினன்.

சுலோசனையும், நெஞ்சுறுதியைக்கைப்பிடித்து, "அரசர் பெருமா! யான்கூறுகின்றதனைச் சிறிது நினைவுற்றுக் கேட்பாயாக. சினத்திற்கும், பிரிவிரக்கத்திற்கும் ஈது அமயமன்று. ஊழினாலூட்டப்படும் வினைப்பயன் இன்றியமையாது நுகரத்தக்கதே. இவ்வமயத்திற் சினத்தாற் செயத்தக்கது யாதுளது? போரில் இராமலக்குமணர்களை வெல்லுதற்கு யாவன் வலியன்? இராமன்பொருட்டுச் சானகியைவேண்டுதலின்றியே சேர்ப்பிப்பாயாக. அறிவுமிக்க அமைச்சருள் ஒருவனையும் இராமன் பக்கல் விடுப்பாயாக. என்றலைவனது தலையைக் கொணர்விப்பாயாக. இப்பொழுது யான் அத்தலையை அவசியம் காண்டல்வேண்டும். உடனிறத்தலையும் நிறைவேற்றல்வேண்டும். நற்குடிக்கட்டோன்றிய அரசகுலத்துநங்கையரது குலவொழுக்கமாகிய ஆசாரம் ஈதன்றே. அரசர்பெருமகனாகிய நீ, என்வேண்டுகோளை முறைமையில்லாததுபோல் வெறுத்தொதுக்கிச் சினத்தாற் கண்சிவத்தல் என்னை? நற்செயல்களிற் பற்றில்லாத அரசர்பெருமானாகிய நீ, முதலிற் குற்றத்தை நன்றுகண்டிலை. மிக்க அறிவுடைத்த அரசன் பிறன்மனைவியைத் தடுத்தற்கு எவ்வாறு தகுதியுளனவன்? இராமலக்குமணர்களால் விடப்பட்ட ஊழித்தீயினையொத்த பகழிகளின்முன் நிற்றற்குத் தேவதானவர்களுள்ளும் யாவன் ஆற்றலுடையான்? சனத்தானத்தின்கேட்டையுணர்ந்தும், வாலியின் இறப்பைக் கேட்டும், அரசர்பெருமானின் நெஞ்சம் நடுக்கமுறாமை என்னை? ஆதலின், இராமசந்திரன்பொருட்டுச் சானகியைத்

திருப்பிக்கொடுத்துவிடுவாயாக. நலமற்ற இச்செயல் இனி அமைக" என்று இவைமுதலிய பிற அறிவுபதேசங்களையுஞ் சொல்லிச் சுலோசனை ஒழிவெய்தினாள்.

புதல்வற்பிரிவால் வெதும்புகின்றவனும், இயற்கையானே சினமிக்கவனுமாகிய இராவணன், கற்பரசியாகிய அச் சுலோசனையின் மொழிகளைக்கேட்டுச் சினந்தீக் கிளர்ந்தெழ, ஒளிர்கின்ற விளக்கங்களையொத்த கண்களினின்றும் நெருப்புப் பொரிகளை யிறைத்துப் பற்களால் உதடுகளைக்கடித்துத் தன் மருகியை எரிக்கின்றவன்போல நோக்கி, "ஆ! மதியற்றவளே! இலங்கேசுவரன்மாட்சி யின்னதென் றுணராதவளே! பல்லாற்றானும் உபதேசித்தனை. நீயே எனக்குக் கட்டளையிடுபவளாகின்றாய்? என்பக்கல் எய்தித் தடையின்றி இவ்வாறு புலம்புதற்குப் பேதையாகிய நீ எங்ஙனம் உரியை. இப்பொழுதே எனது சந்திரகாசன் நினது நாவை அறுப்பான். அறிவிலியாகிய நீ மிகவும் வெறுக்கத்தக்கவள். உண்மையாகவே நீ தலைவற்பிரிவால்நேர்ந்த துன்பத்தால் வருந்தினையாயின் இத்துணைக்காலம் உயிரைத்தாங்கியிருத்தல் என்னை? விரைவிற்செல்க! இக்கணமே கிளர்கின்ற நெருப்பின்கட் சேர்வாயாக. வீரனாக நினைக்கத்தக்க எவன்றான், பகைவன்பக்கலெய்திப் போரிலிறந்தவனது தலையைவேண்டுதற்குத்துணிவான்? மீண்டும் இங்ஙனம் புலம்புவாயேல் இக்கணத்தே யானே நின்னை இயமனில்லத்தின்கண் அடைவிப்பேன். என் அருகில்நில்லாது செல்க! செல்க! தீக்கண் வீழ்ந்து நின்றலைவன்செல்லுழிச் செல்க" என்று கூறினான்.

சுலோசனை, கண்ணீரானனைந்த தன் முகத்தைத் துடைத்து, மெல்லத் தழுதழுத்தகுரலுடன் "மரணமெய்திய

என்றலைவனதுமுகத்தைக் காணுமல், தீக்கட்புகுதற்கு யாங்ஙனந் துணிவேன்? நினக்கு இராமன்பக்கலெய்தி என் றலைவனது தலையை வேண்டுதலில் விருப்பமின்றேல் எனக்கு விடைதருவாயாக. யானே அவன்சந்நிதியையடைந்து என் நாதனதுசிரத்தை வேண்டுவேன்" என்று தெரிவித்தாள்.

இராவணன், "ஏடி! நாணமற்றவளே! விலங்கினங்களின் துணையைப்பெற்றிருக்கும் இராமன் மக்களுட் டாழ்ந்தவன். மூவுலகத்திற்கும் அரசனுகவும், இராக்கதசக்கிரவர்த்தியாக வும் உள்ள யான், அவன்மனைவியைக் கவர்ந்தேன். அஞ்சத் தக்க திண்ணியனுகிய நின்நாயகனை, அவன்தம்பி போரிற் கொன்ருன். ஆங்ஙனங் கொல்லப்பட்ட இந்திரசித்துவின் மனைவியும், என்மருகியும், சானகியை ஒத்த அழகுவாய்ந்தவ ளும், இளமையுடையாளும் ஆகிய நீ, நின்றலைவனை இழந் திருக்குக்கால், நம்பகைவனும், காதலியின்பிரிவாற் றுன் புறுகின்றவனும், எழின்மிக்கானுமாகிய இராமனது பக்கலை யெய்துதலென்னும் இஃது எங்ஙனம் பொருத்தமுடைய தாகும்? 'புதல்வனிறத்தலாலச்சமுற்ற இராவணன் பகைவர் களை உடனபடுத்தற்பொருட்டுத் தன்மருகியை ஏவினுன்' என் றன்றே உலகம் பழித்துரைக்கும். அப்பாதகனுகிய இராமன், முன் என்றங்கையை விகாரப்படுத்தியதுபோல் நின்னையும் செய்வான். ஆதலின், அறிவிலியாகிய நீ அவன்பக்கலிற் சேருதல் தகுதியன்று. எவ்வாற்ருனும் நின்சொல்லை ஏற்பே னல்லேன். என்முன்னில்லாது விரைந்துசெல்வாயாக" என்று உரத்தகுரலுடன் அவளைப் பழித்துரைத்தான்.

செவியைவெதுப்புகின்ற அவனது கடுஞ்சொற்களைக் கேட்டுப் பிரிவிரக்கமுஞ் சினமும் மிக்க அக் கற்பிற்சிறந்த

பெண்மணி, "பொருத்தமின்றி இங்ஙனம் எதற்காகப்புலம்பு கின்றாய்? நெறிபிறழ்ந்த ஒருவன் உலகமனைத்தையுந் தன்னைப் போற் காண்கின்றான். பிறர்மனைநயத்தலிற் பற்றுடையனாகிய நீ வாய்மையிற்சிறந்த இராமனை ஏன் இவ்வாறு பழித்துரைக் கின்றாய்? இப்பொழுதே நின் நாவானது நிலத்தில் அடியோடு வீழும். எல்லாவுலகங்களுக்கும் புகலிடமாயுள்ள பெரியோ னாகிய இராகவனது அணிமைக்கண் தலைவனது தலையை வேண்டுதற்கு அடைகின்ற என்னை உலகம் நிச்சயமாகப் பெருமைப்படுத்தும். பாவியாகியநினது நெஞ்சத்தின் கண்ணே அத்தகைய கொடுஞ்சூழ்ச்சி தோன்றியது. விரைந்து தீவினை யின்பயனை நுகர்வாய். எஞ்ஞான்றும் தீத்தொழிலையே புரிகின்ற நீ கொடியநரகத்தில் வீழ்தல் உறுதியே. நினக்கு அத்தகைய ஊழ் உளது. வீரியச்செருக்கினாலேயே தற் புகழ்ச்சிசெய்யற்க. காட்டுத்தீயினையொத்ததும், இராம பிரானது வில்லினின்றும் வெளிப்படுவதுமாகிய, பகழியாகிய நெருப்பு விரைந்துபோந்து நினது தலைக்காட்டை நீறாக்கும். குலத்துக்குக் கேடுவிளைக்குஞ் சிறுமையாளனாகிய நீ மிகவும் வெறுக்கத்தக்கவன்" என்று சொல்லிவிட்டு இராமனையே புக லிடமாகக்கருதி எல்லாத்தோழிமார்களையும் ஒழித்து இரா வணனது சபாமண்டபத்தினின்றும் வெளிப்பட்டாள். இரா மன் வானரவீரர்கள்சூழ, வீற்றிருக்கும் அகன்ற ஆடையாண் அமைந்த இல்லத்தைநோக்கிச் சென்றாள். இவ்வமயத்தில் இராமபிரான் வன்மையாளருட்சிறந்த மாயாவியான இந்திர சித்துவைக் கொன்று, புண்ணீர்தோய்ந்த உடலுடன் வந்த இலக்குமணனைத் தன் மடித்தலத்திருத்தி இறுகுறத்தழீஇ

அன்புடன் உச்சிமோந்து, "குழந்தாய்! இலக்குமண! செயற்கரிய செய்கின்ற நீ நல்லன செய்தனை. கெடுமதியாளனாகிய, அவ்விராவணனது வலக்கையாகிய இந்திரசித்துவின் இறப்பைக் கேட்டு இராவணனே இறந்தானென்று எண்ணுகின்றேன். இன்றுதான் பகைமையில்லாதவனாயினேன். இப்பொழுது இராவணன், தானே போர்குறித்து வெளிப்படுவான். அக்கொடியவனை விரைவிலேயே அழித்துவிடுவேன். வீரர்களுக்குரிய கடமையையும் நிறைவேற்றுவேன். தோன்றால்! வீரருட்சிறந்த இந்திரசித்துவின் அம்பின்றொகுதியை நீ எங்ஙனம் ஆற்றினாய்! மிகக்கடிய அம்பினாற்றுளைக்கப்பட்டு ஒழுகும் புதிய செந்நீராற்பூசப்பட்ட நினதுஇவ்வுடலை நோக்கும்பொழுது என் நெஞ்சம் வெதும்புகின்றது. இந்திரசித்து பெரியவீரனன்றே! நின்னையன்றி இவனைக் கோறற்கு ஒருவனும் வலியுடையானல்லன். அச்சிறுமையாளன் தொலைந்தான்" என்றுசொல்லிச் சுசேனனைஅழைத்து, "சுசேன! உடன்பிறந்தாரிடத்து அன்புமிக்க இலக்குமணனுடம்பிற்றைத்த அம்புகளைப் போக்கி மிகவும் சுகமுற்றிருக்குமாறு உரியமருந்துகளாற் சிகிற்சைசெய்வாயாக" என்று கட்டளையிட்டான்.

அக் *காழகவில்லத்தின் வாயில்காத்தற்குக் கட்டளையிடப்பட்ட அநுமானும், விபீடணனும் தம்முட் பின்வருமாறு உரையாடினார்கள்:—

"ஓ! விபீடண! போரில் இலக்குமணனாற் றன்புதல்வன் இறந்தசெய்தியைக் கேட்டு இராவணன் அஞ்சிச் சானகியை விடுவானென்று எண்ணுகின்றேன்."

* காழக இல்லம்—ஆடையாரணமைத்த வீடு.

"ஓ! அறிஞருட்சிறந்தோய்! ஒருபொழுதும் அக் கெடு மதியாளன் இங்ஙனஞ்செய்யான். தன்னுயிரையேவிடுவான்."

"ஓ! விபீடண! சிறிது தூரத்தே பார்க்க. புதல்வன் இறந்தமையால் அஞ்சிய இராவணனால் விடப்பட்டுச் சானகி, தானே கண்டுப் போதருகின்றாள்."

"ஆம். அநுமானே! ஆச்சரியம்! ஈது எங்ஙனம் நிகழ்ந்தது? இவளைப்பற்றி எனக்கு ஐயம் நிகழுகின்றது. நிற்க. பார்ப்போமாக."

இங்ஙனம் உரையாடிக்கொண்டிருக்க அவ்விருவர்களும் அணிமைக்கண் எய்திய அவளது வருந்தத்தக்க வேடத்தா னும், மதிக்கத்தக்க உருவச்சிறப்பானும், வஞ்சிக்கப்பட்டவர் களாய்ச் சிறிது அசைவற்றிருந்தார்கள். அப்பெண்மணியுந் தடையின்றி உள்ளேபுகுந்தாள். இராமபிரானையும் பார்த் தாள். இதனிடையில் தம் நிலையெய்திய அநுமானும் விபீடண னும் அம்மங்கையைக் காணுமையான் வியப்புடன் உட்புகுந் தனர்.

அங்ஙனம்வந்த பெண்மணி இராமன்றிருவடிகளில் வணங்கித் தலையிற்கூப்பிய கையினையுடையளாய், "அடைக் கலம்புகுந்தார்க்கு அருள்செய்யும்வள்ளால்! இராமபத்திர! யான், நிகும்பிலையில் இலக்குமணனாற்கொல்லப்பட்ட இந்திர சித்துவின்மனைவி. பேறிலளாகிய என்னைச் 'சுலோசனை' என்னும் பெயரால் அழைப்பார்கள். என் தலைவனது அறுக் கப்பட்ட கைத்துண்டினால், 'தலை இராமபிரான்றிருவடித் தாமரைகளையடைந்து இன்பம் நுகர்கின்றது' என்று எழுதப்பட்டது. பகவானே! அருள்க. என் றலைவன்

தலையைக் கொடுப்பாயாக. அதனைக்கண்டபின்னரே என் பிராணபதியைத் தீப்புகுந்து பின்றொடர்வேன்" என்று வேண்டினாள்.

அதனைக்கேட்டுச் சில வானரங்கள், "'அறுபட்ட தலையின்நிகழ்ச்சிகளை அறுபட்டகை யெழுதியது' என்னுமிது மிக்க வியப்பே!" என்று சொல்லிச் சிரித்தன. வேறுசில வானரங்கள், "இராவணனால்விடப்பட்டுச் சானகியையொப்ப உருக்கொண்டுபோந்த ஓர் அரக்கியாகிய இவள் நம்மை வஞ்சிக்கற்கு ஈண்டுற்றாள். இப்பொழுதே இவளைக் கொல்வோம்" என்று சினந்துகூறின.

"போர்க்களத்தே இறந்தவீரர்களின் தலை எங்ஙனம் இங்குக் கொணரப்படும்? நீ இந்திரசித்துவின்மனைவியாயின் நின் தலைவனது அறுபட்டதலையைக் காண்டற்குரிய நிரும் பிலையை அடைவாயாக" என்று கூறினான் அநுமான்.

சுலோசனையை முதற்கட்பார்த்தவளவினனே இலக்குமணன் மிகவும் கலக்கமுற்று மனத்தாற் பலபல நினைந்து, நீர்நிறைந்த கண்களையுடையனாய்த் தன்னையுஞ் சிறிதுமறந்து, இன்னதென்றுகூறொணாத மனநோயால் வருந்தி, நெடுநேரம் வாய்வாளாதிருந்தான்.

பின்னர், இராகவன், வானரங்களினது ஆரவாரங்களை நிறுத்திப் புன்னகைசெய்து, "அநுமானே! ஏன் இங்ஙனங் கூறுகின்றாய்? உலகத்தில், இயங்கியற்பொருள்களின் நினைக்கப்படாதெய்துவனவாகிய பற்பல நிகழ்ச்சிகள் தோன்றுகின்றன. இக்கற்பரசி, மேகநாதன்மனைவியென்ப துண்மையாயின், எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்து துணிவோமாக.

'அறுபட்டதலையின் செய்தியை அறுபட்டகை யெழுதியது' என்னும் இஃது இப்பெண்மணியாற் கூறப்பட்டது. அதன் உண்மையை வெளிப்படுத்துவோமாக" என்று கூறிச் சுலோசனையைநோக்கிக் "கற்புடைமாதராய்! இவர்கள் நின்சொல்லை நம்புகின்றார்களில்லை. நின் தலைவனது அறுபட்டதலை கொணரப்படுமாயின் அது நின்வினாக்களுக்கு விடைகூறுங் கொலோ?" என்று வினவினான்.

எங்ஙனமேனுந் தலையைக் காண்டலிற் பேரவாவினையுடைய அச்சுலோசனை, "யான், உண்மையாகவே இந்திரசித்துவின்மனைவியாயின், அறுபட்டதாகிய என் நாதன் தலையும் என்றாற் கேட்கப்படும் வினாக்களுக்கு இன்றியமையாது விடைகூறும்" என்று சொன்னாள். பின்னர், இராமபிரான் கட்டளையிட்டவாறு மாருதி விரைந்துசென்று, அறுபட்ட இந்திரசித்துவின்றலையை ஆண்டுக்கொணர்ந்து அவைநடுவண் மிகவுயர்ந்த ஒரு பிரப்பிருக்கையில்வைத்தான். நாயகனதுதலையைக்கண்ட அப்பொழுதே சுலோசனை மிக அவலமுற்றுப் புலம்பினாள். பின்னர்த் தன்னிலையை மிக முயன்றடக்கி, எழுந்து, வலஞ்சுற்றிவந்து, தலைப்பாகினையும், ஒளிர்கின்ற குழைகளையுமுடைய அத்தலையைக் கைகூப்பிய சிரத்தான்வணங்கி, "நாத! கட்டளையின்வண்ணம் ஈண்டெய்திய என்சொல்லில் யாரும் நம்பிக்கைவைத்திலர். நினது கைத்துண்டினால் எழுதியெற்கறிவித்த நிகழ்ச்சியனைத்தும் அறிந்தும், 'அறுபட்ட கை யெழுதியது' என்று என்னை இழித்துரைக்கின்றார்கள். ஆதலின், இவர்கள் நம்புதற் பொருட்டு நின்னையே புகலிடமாகவுள்ள என்னை மலர்ந்த முகத்துடன் சிறிதுநோக்கி, என்னுடன் சிறிது உரையாடல்

வேண்டும். அருள்க" என்று சொல்லினாள். அசைவற்றிருந்த அத் தலையைப்பார்த்து, "இறந்தவனது தலை இவளோடு எங்ஙனம் பேசும்? நிலைபிறழ்ந்த இவள் நம்மெல்லோரையும் ஏமாற்றுதற்பொருட்டுப் பற்பலசூழ்ச்சிகளைச் செய்கின்றாள்" என்று எல்லாவானரவீரர்களும் பேசினார்கள். இருமுறை மும்முறை வேண்டப்பட்டும், அவ் விராவணிபின்றலை மௌனத்தைவிட்டிலது. அதுகண்டு துன்பமிக்க அப் பெண்மணி, "தலைவ! இவர்கள்முன்னிலையில் எதற்காக என்னையீர்த்துவந்து அவமானப்படுத்துகின்றாய்? இலக்குமணனோடு போர்நிகழுங்கால் நினக்குத் துணைசெய்தற் பொருட்டு என் தந்தையை யான் அழைத்துவந்திலனென்றோ என்னைச் சினக்கின்றாய்?" என்று கூறினாள். அவள்மொழிந்த அச் சொல்லைக்கேட்டுச் சினத்தாற் கவரப்பட்டதுபோலவும், நாணத்தாற் பற்றப்பட்டதுபோலவும் அத்தலை பரபரப்புடன் ஒருமுறை நகைத்து, "ஏடி! என்பிரியே! சுலோசனே! என்னை நன்றாகப்பழிக்கின்றாய். இப்பொழுது இவ்வெல்லோரும் எனதன்புரிமைக்காதலியாக நின்னையே நம்புகின்றார்கள்" என்று மேகமுழக்கம்போன்ற பேரொலியாற்கூறி யொழிவுற்றது.

எல்லோரும் அதனைக்கேட்டு வியப்புமிக்கமனத்தினராய்ச் சுலோசனையின் கற்புநிலையைப் பாராட்டினார்கள். அநுமான், சுலோசனையை நிலத்தில்வீழ்ந்து வணங்கி "யான் செய்த எல்லாப்பிழைகளையும் பொறுத்தருள்க!" என்று வேண்டினான். பின்னர்ச் சுலோசனை இராமலக்குமணர்களை அன்புடன்வணங்கி வாயுபுத்திரனைத் துணையாகப்பெற்றுத் தன்காரியத்தை நிறைவேற்றுதற்குப் புறப்பட்டாள்.

அநுமான், முகூர்த்தப்பொழுது கடந்தபின்னர் "ஆ! கற்பரசியாகிய சுலோசனை, தன்காதலன்சென்றுழிச் சென்றாள்" என்று தழுதழுத்தகுரலுடன் மொழிந்துகொண்டு, மிகவிரைந்து அவ்விடத்துப் போந்தான். சாலவு மிரங்கத்தக்க அச் சுலோசனையின் நிகழ்ச்சியால் எல்லாருஞ் சிறிது நேரந் துன்பக்கடலுள் மூழ்கினார்கள். அறிவுடையாரிற் சிறந்த வாயுகுமாரன் இராமன்பக்கலெய்திப் " 'போர் நிகழுங்கால் நினக்குத் துணைசெய்தற்பொருட்டு என் தந்தையை யான்அழைத்துவந்திலேன்' என்று அக்கற்பரசிசொல்லிய அதன் உண்மையை என்மனம் அறியவிரும்புகின்றது. ஐய! தெரிவித்தல்வேண்டும். எங்கள் வேட்கையை அகற்றல்வேண்டும். பகவானே! அருள்செய்க" என்று வேண்டினான்.

இராகவனும், " மிக்க மறைபொருளாகியநிகழ்ச்சியையன்றோ கேட்கின்றாய். அதனைவெளிப்படுத்தற்கு என்மனம் விரும்பவில்லை. என்னையெனின், அச்சொல் யாவனாயினும் ஒருவனது உள்ளத்தை மிகவும் வருத்துமாதலின்" என்று கூறிப் புன்னகைசெய்தான்.

அதுகேட்ட சுமித்திரைபுதல்வன் நெடுநேரம் மறைந்து கிடந்த பிரிவிரக்கமாகியதீயால் வெதும்பி "ஐய! அவ்விளம் பெண் எப்பொழுது என்கண்ணுக்குப் புலனாயினளோ, அது முதலே எனக்குப் பெரிய கவற்சியுண்டாயது. நெஞ்சம் நிலையின்றிச் சுழல்கின்றது. அவள் என்பாற் பழக்கமுள்ளவள்போற் காணப்படுகின்றாள். இந் நிகழ்ச்சிக்குக் காரணம் இன்னதென் றுணர்ந்திலேன். ஆதலின், அவள்வரலாற்றை அவசியம் தெரிவித்தல்வேண்டும்" என்று புகன்றான்.

இராகவனுஞ் சிறிது நினைவுகூர்ந்து, இலக்குமணனது மார்பில், தன்கைத்தலத்தாற் றைவந்தான். அப்பொழுதே இலக்குமணன் "ஆ! கெட்டேன்! ஆ! குழந்தாய்! சுலோசனே! தீவினையாளனாகிய யானே யெனது மருகனைக் கொன்றேன். கொடியவனாகிய யானே நின்மரணத்திற்கும் காரணமாயினேன்" என்று வாய்திறந்து அழுதற்குத் தொடங்கினான். மீண்டும், இராமபிரான் இலக்குமணனைத் தேற்றுகின்றவன்போலத் தன்கைத்தலத்தால் அவனைத்தடவினான். தன் இயற்கைநிலையையெய்திய இலக்குமணன், எல்லாத் துன்பங்களையும் மறந்து, விகாரமற்றவனாய் வாய்வாளாதிருந்தான். அந் நிகழ்ச்சியைக் கண்டு வியப்புற்றவர்களாய் எல்லோரும், "ஈதென்னே!" என்று பரபரப்புடன் இராகவனைக் கேட்டனர். அவனும், "சுலோசனையோ, நாககுலத்துக்குத் தலைமணியான ஆதிசேடனது புதல்வியாவள். திக்குவிசய யாத்திரைநிமித்தம் நாகருலகத்தையெய்திய இந்திரசித்துவுக்குக் கொடுக்கப்பட்டாள். இலக்குமணனே இந் நிலவுலகததில் அவதரித்த ஆதிசேடனென்று உணர்மின்கள். ஆதலின் அவ் விலக்குவனுக்கு உள்ளேயுள்ள தொடர்பால் அததகைய மனக்கலக்கம் உண்டாயிற்று. கற்புடையாருட் சிறந்தவளன்றே சுலோசனை. ஆ! அச் சுலோசனையினது கற்பின்மாட்சியைக் காண்மின்கள்!" என்று கூறினான்.

வெண்பா.

கற்பிற் சிறந்த கனங்குழையார் தம்முள்ளே
சொற்புகழின் மிக்காள் சுலோசனையே—பொற்பிற்
றிகழுடலைத் தீப்பெய்து சென்றனளா லன்பன்
புகுமிடதனைச் சார்ந்தின் புற.

சுபம். சுபம்.

உ

மேலைச்சிவபுரிச்

# சன்மார்க்கசபை வெளியீடுகள்.

ஆசிரியர்: பண்டிதமணி திரு. மு. கதிரேசச்செட்டியாரவர்கள்.

## 1. சுலோசனை (இரண்டாம் பதிப்பு.)

இஃது, அரிய இனிய செந்தமிழ்நடையில் எழுதப் பட்டது; இலக்குவனால் அமரிடை மடிந்த தன் தலைவனாகிய இந்திரசித்துவின் பிரிவாற்றாது, யாவரும் வியக்குமாறு தன் கற்பின்திறத்தைப் புலப்படுத்தி இறுதியில் அருந்தழல் புகுந்த கற்பரசியாகிய சுலோசனையின்வரலாற்றைக் கூறுவது.

இதன்கண் அவலச்சுவையே சிறப்பாகநிலவுகின்றது; சுலோசனையின் அருங்கற்பும், பெருங்குணங்களும், அறி வுடைமையும் தலைவற்பிரிவால் துன்புறுநிகழ்ச்சிகளும், படிப்பார்க்கு வியப்பும் உருக்கமும் தோன்ற இன்புறுத்து வனவாம்; அறுபட்டனவாகிய கையும் தலையும் முறையே எழுதியதும் பேசியதும் கற்பின் ஆற்றலைப் புலப்படுத்து வனவாம். இப்பிறப்பிற் பயிலப்படாதாரைக் கண்டவிடத்து ஒரோவழியுண்டாம் அகநிகழ்ச்சிகளுக்கு முற்பிறப்பின் தொடர்பே காரணமென்பதும் இதன்கட் காணலாம்.

இஃது, ஆங்கில உயர்தரக்கல்லூரிகளிற் பாடபுத்தக மாக ஏற்றுக்கொள்ளப்பட்டது; தமிழ்ப்பேராறிஞர்சிலர் எழுதிய சிறந்த மதிப்புரைகளுடன் அழகுற அச்சிடப்பட் டுள்ளது.

விலை ரூபா 0—4—0

Meenalochani Press, Madura-38.

## 2. உதயனசரிதம். (இரண்டாம் பதிப்பு.)

இது, தெள்ளிய இனிய எளிய தமிழ்நடையா னமைந்தது; வற்சநாட்டின் தலைநகராகிய கௌசாம்பியி லிருந்து அரசுபுரிந்த சகச்சிரானீகன் புதல்வனாகிய உதயன னதுவரலாற்றையும், அவன்மகன் நரவாகனதத்தன்வரலாற் றையும் சுருக்கி விளக்குவது. வடமொழியிற் பல நூல் களிலும் தமிழிற் பெருங்கதை என்னும் அரிய காப்பியத் திலும் சிற்சில வேறுபாட்டுடன் விரித்துக்கூறப்பட்டதும் இதுவேயாம்.

இதன்கண் அரசர்க்கு வேட்டையாடல் முதலியவற்றால் வரும் தீங்கும், அறிவிற்சிறந்த அமைச்சர்சொல்வழிநிற்றலால் வரும் நலங்களும், சிறந்த அமைச்சனின் அரிய சூழ்ச்சி முதலிய செயல்களும், இடுக்கட்காலத்தும் மகளிர்கற்பு மாசுபடலாகாது என்பதும், ஒருவற்கு அமைந்த இரு மனைவியரின் அன்புகெழீஇய ஒற்றுமையும், அரசியல் விரிவதற்குச் செயற்பாலன இன்னவென்பதும், சிவவழி பாட்டின் பயனும், பிறவும் புலப்படுவனவாம்.

பற்பல கல்லூரிகளிற் பாடபுத்தகமாக ஏற்படுத்தப் பட்டுள்ளது. வனப்புமிக்க பதிப்பு.

**விலை ரூபா 0—12—0**

## 3. சுக்கிர நீதி.

இஃது, அறமுதலிய உறுதிப்பயன்கள் நான்கனுள் ஒன்றாகிய பொருளினையே விதந்துகூறுவது; தூய செந்தமிழ்நடையானமைந்தது; வடமொழியில் சுக்கிராசாரியார் விரித்துக்கூறிய ஔசநசம் என்னும் நூலின் சாரமாக இரண்டாயிரத்தறுநூறு சுலோகவடிவில் தொகுக்கப்பட்ட சிறந்த பொருள்நூலின் நேரான மொழிபெயர்ப்பாகும்.

அரசியல் அமைச்சியல் குடிகளியல்பு ஒழுக்க வகைகள் உழவு வாணிகம் போர்முறை முதலிய அரிய பல பொருள்களை விரித்து விளக்குவது; தமிழ் ஆங்கிலம் வடமொழிகளிற் சிறந்த பேரறிஞர்களால் எழுதப்பட்ட மதிப்புரைகளையும் விரிந்த ஆராய்ச்சியுரைகளையும் தன்னகத்தேயுடையது. தமிழில் இதுகாறும் வெளிப்படாத சில அரிய செய்திகளும் இதனால் அறியலாம். "வெள்ளியும் பொன்னும் என்பார் விதிமுறை" என்று கம்பநாடரால் முதற்கண்வைத்துப் பாராட்டப்பெற்ற வெள்ளிவிதிமுறை இதுவேயாகும்.

உயர்ந்த காகிதத்தில் சிறந்த முறையில் அச்சிடப்பெற்றது. காலிக்கோ கட்டிடம்.

**விலை ரூபா 3—8—0**

## 4. மண்ணியல்சிறுதேர்.

இது, வடமொழியில் புலமைமிக்க சூத்திரகன் என்னும் அரசனால் பல்வகைச் சுவைகளுக்கும் நிலைக்களமாக இயற்றப்பட்ட "மிருச்சகடிகம்" என்னும் பிரகரணநாடகத்தின் தமிழ்மொழிபெயர்ப்பாகும்; சொற்பொருளினிமைமிக்க பலதிறப்பட்ட 371 செய்யுட்கள் இடையிடையே விரவப்பெற்ற பத்து அங்கங்களையுடைய உரைநடைநூலாகும்; ஆங்காங்கு அரும்பொருட்குறிப்புக்களையும் சிறந்த ஆராய்ச்சி மதிப்புரைகளையும் தன்னகத்தே யுடையது.

அந்தணர்குலத்துதித்து வாணிகத்தொழிலை மேற்கொண்ட வள்ளற்பெருமானாகிய சாருதத்தனும், அவன் பொருள்வறந்தநிலையில் அவன் அரிய குணங்களுக்கு ஈடுபட்டுக் காதல்மேற்கொண்ட கணிகை வசந்தசேனையும் இதன்கண் முக்கிய பாத்திரராவர்; அரசன்மைத்துனனாகிய கொடியவன் சகாரன் இழைத்த கொடுஞ்செய்கைகளால் இவ்விருவரும் பலவகை அல்லலுழந்து முடிவில் அறந்தலைகாக்க உய்திபெற்று இன்பவாழ்வெய்திய வரலாற்றை விரித்து விளக்கும் இதன்கண் வறுமைநிலையும், சூதினால் வரும் ஏதமும், நட்பின்பெருமையும், உண்மைக்காதலின் உயர்வும், கற்பறத்தின் பீடும், பிறர்க்குவிளைக்குந் தீங்கினால் வரும் துன்பமும், வள்ளன்மையின் மாண்பும், அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற்றாவதும், இடுக்கண்மிக்ககாலத்தும் இயலறம்பிழையாமையாலுண்டாம் இன்பமும், பிறவும் அமைந்து கற்பார்க்குக் கழிபேருவகை அளிப்பனவாம்.

உயர்வகுப்பு மாணாக்கர்களுக்குப் பாடபுத்தகமாந் தகுதி வாய்ந்தது. உயர்ந்த காகிதத்தில் சிறந்தமுறையில் அச்சிடப் பெற்றுள்ளது.

விலை: காலிக்கோ பைண்டு ரூ. **2-4-0**. ராப்பர்பைண்டு ரூ. **2**.

கிடைக்குமிடம்:

**தலைவர், சன்மார்க்கசபை, மேலைச்சிவபுரி.**

Melasivapuri, P. O., Pudukkottah State.